ஞானி புருஷர் தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# மரணம்

முன், பின் மற்றும் நிகழும் போது...

பிறந்த எது ஒன்றும்,
கண்டிப்பாக இறந்து போகும்.
பிறப்பு மற்றும் இறப்பு
ஆத்மாவிற்கு கிடையாது.
ஆத்மா நிரந்தரமானது.

Tamil




ஞானி புருஷர் தாதா பகவான் அவர்களால் விவரிக்கப்பட்ட

# மரணம்

## முன், பின் மற்றும் நிகழும் போது...

நிருபென் அவர்களால் தொகுக்கப்பட்டது மற்றும்
பின்பற்றுபவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.




**பதிப்பாளர்** : **திரு. அஜீத்.சி.படேல்**
**தாதா பகவான் விஞ்ஞான் பௌண்டேஷன்**
1, வருண் அபார்ட்மெண்ட், 37 ஸ்ரீமாலி சொசைடி,
நவ்ரங்பூரா காவல் நிலையம் அருகில்,
நவ்ரங்பூரா, அஹமதாபாத் – 380009.
குஜராத், இந்தியா.
தொலைபேசி: +91 79 3500 2100

**தாதா பகவான் பௌண்டேஷன்**
5, மம்தாபார்க் சொசைட்டி
பி எச், நவ்குஜராத் கல்லூரி,
உஸ்மான்பூரா, அஹமதாபாத் – 380014
குஜராத், இந்தியா.
ஈமெயில் : info@dadabhagwan.org
தொலைபேசி : +91 70 3500 2100



**உள்நோக்க மதிப்பு** : மிகுந்த பணிவு மற்றும்
"நான் யாதொன்றும் அறியேன்"
என்ற விழிப்புணர்வு

**Price** : ₹ 40

**First Edition** : November 2023 (500 copies)

**பிரிண்டர்** : **அம்பா மல்டிபிரிண்ட்,**
பி-99, எலக்ட்ரானிக்ஸ், ஜி.ஐ.டி.சி.,
கே-6 ரோடு, செக்டார் - 25,
காந்திநகர் – 382044.
தொலைபேசி: +91 79 3500 2142

**ISBN/eISBN** : 978-93-91375-63-8

**Printed in India**

# த்ரிமந்திரம்





நமோ வீதராகாய
நமோ அரிஹந்தானம்
நமோ சித்தானம்
நமோ ஆயரியானம்
நமோ உவஜ்ஜாயானம்
நமோ லோயே சவ்வ சாஹுனம்
ஏசோ பஞ்ச நமுக்காரோ
சவ்வ பாவப்பனாசணோ
மங்களானம் ச்ச சவ்வேசிம்
பதமம் ஹவயி மங்களம்
ஓம் நமோ பகவதே வாசுதேவாய
ஓம் நம சிவாய
ஜெய் சச்சிதானந்தம்





# தாதா பகவான் என்பவர் யார்?

ஜூன் 1958, சுமார் மாலை ஆறு மணிக்கு, சூரத் ரயில் நிலையத்தில், சலசலப்புக்கு மத்தியில் ஒரு பெஞ்சில் அம்பாலால் முல்ஜூபாய் பட்டேல் அமர்ந்திருந்தார். அப்போது தாதா பகவான், அம்பாலால் அவர்களின் புனிதமான உடலுக்குள் முழுமையாக வெளிபட்டார். ஆன்மீகத்தின் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்வை இயற்கை வெளிப்படுத்தியது! ஒரு மணி நேரத்திற்குள் பிரபஞ்சத்தின் தரிசனம் அவருக்கு வெளிபடுத்தப்பட்டது! நாம் யார்? கடவுள் என்பவர் யார்? உலகை இயக்குபவர் யார்? கர்மா என்றால் என்ன? மோட்சம் என்றால் என்ன? போன்ற அனைத்து ஆன்மீக கேள்விகளுக்கு முழுமையான தெளிவு கிடைத்தது.

அன்று மாலையில் அவர் அடைந்த ஞானத்தை, தனது பிரத்தியேக விஞ்ஞான ஆய்வு முறை *(ஞானவிதி)* மூலம் மற்றவர்களுக்கு இரண்டே மணி நேரத்தில் ஞானம் வழங்கினார். இதை அக்ரம் பாதை என்று குறிப்பிடப்படுகிறது. *க்ரம்* என்றால் ஒன்றின் பின் ஒன்றாக மேலே ஏறுவது அதாவது படிப்படியாக ஏறுவது, ஆனால் *அக்ரம்* என்றால் படி இல்லாத எளிதான, லிப்ட் பாதை.

தாதா பகவான் யார் என்பதை அவர் மற்றவர்களுக்கு விளக்கி கூறுவது என்னவென்றால், உங்கள் முன்னால் தெரிபவர் தாதா பகவான் அல்ல, நான் *ஞானி புருஷ்*, என்னுள் “பதினான்கு உலகங்களுக்கும் அதிபதியான தாதா பகவான் வெளிப்பட்டு இருக்கிறார்”. அவர் உங்களின் உள்ளும் உள்ளார். அனைவரின் உள்ளும் உள்ளார். ஆனால் அவர் உங்களினுள் வெளிப்படாமல் இருக்கிறார். இங்கு (ஏ.எம்.பட்டேல் அவர்களின் உள்) முழுமையாக வெளிப்பட்டு இருக்கிறார். நான் இறைவன் *(பகவான்)* அல்ல. என்னுள் வெளிபட்டிருக்கும் தாதா பகவான் அவர்களை நானும் தலை வணங்குகிறேன்.



# ஆத்ம ஞானம் அடைவதற்கான தற்போதைய தொடர்பு

1958 ஆம் ஆண்டு ஆத்ம அனுபவம் பெற்ற பிறகு, மதிப்பிற்குரிய தாதாஸ்ரீ, ஆன்மீகத்தை தேடுபவர்களுக்கு, ஆன்மீக சொற்பொழிவுகள் மற்றும் ஆத்ம ஞானம் வழங்குவதற்காக தேசிய மற்றும் சர்வ தேச அளவில் பயணம் செய்தார்.

தாதாஸ்ரீ தான் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே, டாக்டர் பூஜ்ய நிரூபென் அமீன் அவர்களுக்கு, ஆத்ம ஞானம் மற்றவர்களுக்கு வழங்குவதற்கான ஆன்மீக சக்தியை அளித்தார். தாதாஸ்ரீ அவர்களின் உயிர் பிரிந்த பிறகு, பூஜ்ய நிரூமா ஒரு செயல் புரியும் கருவியாக, தாதாஸ்ரீ அவர்களின் ஆன்மீக சொற்பொழிவுகள் மற்றும் ஆத்ம ஞானத்தை, ஆன்மீக நாட்டமுடையவர்களுக்கு வழங்கினார்.

தாதாஸ்ரீ, பூஜ்ய தீபக்பாய் தேசாய் அவர்களுக்கும் ஆன்மீக சொற்பொழிவுகள் நடத்துவதற்கான ஆன்மீக சக்தியை அளித்தார். இப்போது பூஜ்ய தீபக்பாய், பூஜ்ய நிரூமா அவர்களின் ஆசியினால், ஒரு செயல் புரியும் கருவியாக தேசம் மற்றும் சர்வதேச நாடுகளுக்கு சென்று ஆத்ம ஞானம் வழங்கி வருகிறார்.

ஆத்ம ஞானத்தை அடைந்த பிறகு, ஆயிரக்கணக்கான ஆன்மீக நாட்டமுடையவர்கள் தங்கள் உலகப் பொறுப்புகள் அனைத்தையும் நிறைவேற்றிக் கொண்டே, உலகியல் பந்தத்தில் இருந்து விடுபட்டு ஆத்ம ஞான நிலையில் நிலைபெறுகின்றார்.



# <u>இந்த மொழிபெயர்ப்பு பற்றிய குறிப்பு</u>

அம்பாலால் எம்.பட்டேல், பொதுவாக தாதாஸ்ரீ அல்லது தாதா என்று அழைக்கப்படும் ஞானி புருஷ் அவர்கள், ஆன்மீக ஆர்வலர்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதில் வடிவில் ஆன்மீக சொற்பொழிவுகளை வழங்கினார்.

இந்த சொற்பொழிவுகள் பூஜ்ய டாக்டர் நிரூபென் அமீன் அவர்களால் பதிவு செய்யப்பட்டு, குஜராத்தி மொழியில் புத்தகங்களாக தொகுக்கப்பட்டது, தாதாஸ்ரீ தனது *சத்சங்கம்* மற்றும் ஆத்ம அனுபவ விஞ்ஞானத்தை பற்றிய ஞானத்தை வார்த்தைக்கு வார்த்தை மற்ற மொழிகளில் மொழிபெயர்ப்பது சாத்தியம் இல்லை. ஏனெனில் சில அர்த்தங்கள் அதில் இழக்க நேரிடும் என்று கூறியுள்ளார். எனவே *அக்ரம் விஞ்ஞானம்* மூலம் ஆத்ம அனுபவத்தை துல்லியமாக புரிந்துகொள்வதற்காக குஜராத்தி கற்க வேண்டியதன் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார். இருப்பினும், தாதாஸ்ரீ தனது சொற்பொழிவை பிற மொழிகளில் மொழிபெயர்க்க தனது ஆசீர்வாதம் வழங்கினார். ஏனென்றால் ஆன்மீகத்தை பற்றி கண்டறிய விரும்புபவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு பயனடைந்து, பின்னர் தங்கள் சொந்த முயற்ச்சியின் மூலம் முன்னேறி விடுவார்கள்.

இந்த புத்தகம் நேரடி மொழிபெயர்ப்பு அல்ல அவரது மூல முதலான சொற்பொழிவு சாரத்தை பாதுகாக்க அதிக கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

ஆன்மீக சொற்பொழிவுகள் குஜராத்தி மொழியில் இருந்து தொடர்ந்து மொழிபெயர்கப்பட்டு வருகின்றன. சில குஜராத்தி வார்த்தைகளின் அர்த்தத்தை வெளிப்படுத்துவதற்கு பல மொழிபெயர்க்கப்பட்ட வார்த்தைகள் அல்லது வாக்கியங்கள் தேவைபடுகின்றன. எனவே, குஜராத்தி வார்த்தைகளை சிறந்த புரிதலுக்காக மொழி பெயர்க்கப்பட்ட உரைக்குள் தக்கவைக்கப்பட்டுள்ளன. குஜராத்தி வார்த்தையை முதன்முறையாக பயன்படுத்தப்பட்ட இடத்தை அதை சாய்வாக எழுதி அதை தொடர்ந்து

அடைப்புக் குறிக்குள் அதன் அர்த்தத்தை விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது. பின் வரும் உரையில் குஜராத்தி வார்த்தை மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டு மடங்கு நன்மைகளை வழங்குகிறது. முதலாவதாக, மொழிபெயர்ப்பின் எளிமை வாசிப்பதற்கு, மற்றும் இரண்டாவதாக இந்த ஆன்மீக விஞ்ஞானத்தை நன்றாக புரிந்துகொள்வதற்கு முக்கியமான குஜராத்தி வார்த்தைகள், வாசகருக்கு பரிச்சயமாகிறது.

சதுர அடைப்பு குறிக்குள் இருக்கும் உள்ளடக்கம், விஷயத்தின் கூடுதல் தெளிவை அளிக்கிறது. இது குஜராத்தி உள்ளடக்கத்தில் இல்லை.

தாதாஸ்ரீ அவர்களின் ஞான சாரத்தை உலகிற்கு முன் வைக்கும் பணிவான முயற்சி இது. இந்த மொழிபெயர்ப்பை படிக்கும்போது ஏதேனும் முரண்பாடு இருந்தால், அது மொழிபெயர்பாளர்களின் தவறு மட்டுமே, விஷயத்தைப் பற்றிய தெளிவான புரிதலை வாழும் ஞானியிடம் தெளிவுபடுத்தி கொள்ளவேண்டும்.



## தலையங்கம்

மரணம் மக்களிடையே மிகுந்த அச்சத்தை உண்டாக்குகிறது. அது அவர்களுக்கு மிகுந்த துக்கத்தை ஏற்படுத்துவதுடன், அவர்களை ஆழ்ந்த துன்பத்திலும் மூழ்கடிக்கிறது. மேலும், ஒவ்வொருவரும் அவனுடைய அல்லது அவளுடைய வாழ்க்கையின் ஏதாவது ஒரு கட்டத்தில் மரணத்தை சந்தித்தாக வேண்டியுள்ளது. அந்த நேரத்தில், மரணம் குறித்த தெளிவான உண்மைகள் என்ன? என்பது போன்ற நூற்றுக்கணக்கான கேள்விகள் அவருக்கு எழுகின்றன. இருப்பினும், மரணம் குறித்த எந்த பதிலும் அவருக்கு கிடைக்காததால், அவர் அங்கேயே குழம்பிவிடுகிறார். மரணத்தைச் சூழ்ந்துள்ள மர்மங்களைக் கண்டறிய அனைவரும் ஆவலாய் இருக்கின்றனர். இந்த தலைப்பின் கீழ் பல விஷயங்கள் பேசப்பட்டும், எழுதப்பட்டும் உள்ளன. இதை பற்றி, மக்கள் கொண்டிருக்கிற நம்பிக்கைகளை கேட்டு தெரிந்து கொள்கிறார்கள். ஆனால் இவை அனைத்தும் புத்தியில் இருந்து எழும் கற்பனைகளே.

மரணம் என்றால் என்ன? மரணத்திற்கு முன் என்ன நடக்கும்? மரணத்தின் போது என்ன நடக்கிறது? மரணத்திற்கு பின் என்ன நடக்கும்? மரணத்தைப் பற்றிய அனுபவங்களைப் பற்றி யாரால் பேசமுடியும்? இறந்தவர்களால் தங்களின் அனுபவங்களை குறித்து பேச முடியாது. பிறவி எடுப்பவர்களுக்கு அவர்களின் முந்தைய நிலை பற்றிய ஞாபகம் இருக்காது. எனவே, பிறப்பிற்கு முன்னும், இறப்பிற்கு பின்னும் என்ன நடக்கும் என்பது யாருக்கும் தெரியாது. இதனால்தான், ஒருவர் பிறப்பிற்கு முன்பு, மரணத்தின் போது, மரணத்திற்கு பின்பு கடந்து செல்ல வேண்டிய பாதையின் மர்மம் தீர்க்கப்படாமலேயே உள்ளது. தாதாஸ்ரீ அவர்கள், தனக்குள் வெளிப்பட்ட ஞானத்தில் இதையெல்லாம் பார்த்து, மரணத்தின் மர்மங்கள் அனைத்தையும் அப்படியே துல்லியமாக வெளிப்படுத்துகிறார். அவை இங்கே தொகுக்கப்பட்டுள்ளன.

மரணத்தைப் பற்றிய உண்மைகளை அறியும்போதே, மரணத்தை குறித்த பயம் நீங்கி விடுகிறது!

நாம் நேசிக்கும் ஒருவர் இறக்கும் போது நாம் என்ன செய்ய வேண்டும்? நமது கடமை என்ன? அவர்களின் மறுஜென்மத்தை நம்மால் எவ்வாறு மேம்படுத்த முடியும்? நாம் நேசிக்கும் ஒருவரின் மரணத்திற்குப் பிறகு, நாம் என்ன செய்ய

வேண்டும்? எவ்வித புரிதலுடன், நாம் அந்நேரத்தில் நிலையாகவும், அமைதியாகவும் இருக்க முடியும்?

சிராத்தம் (இறந்து போன நம் முன்னோர்களுக்கு மரியாதை செலுத்தும் இந்துக்களின் சடங்கு), *சரவணி* (ஒரு நபர் இறந்த பதின்மூன்றாவது நாளில் ஒரு பிராமணருக்கு படுக்கை, கட்டில் மற்றும் பலவற்றை கொடுக்கும் இந்து மத சடங்கு), *பிரம்ம போஜன்,* (பிராமணர்களுக்கு விருந்து வைத்தல்), தானதருமம் செய்தல், கருட புராணம் (இந்து மதத்தின் பதினெட்டு பண்டைய நூல்களில் ஒன்று) படித்தல் மற்றும் பல்வேறு இதர மத சம்பிரதாயங்கள் போன்ற சமூகத்தால் பரிந்துரைக்கப்படும் மரபுகளுக்கு பின்னால் உள்ள உண்மை என்ன? இந்த சடங்குகளை செய்வதால் இறந்தவருக்கு பலன் அளிக்குமா? இத்தகைய சடங்குகளை ஒருவர் பின்பற்ற வேண்டுமா? மரணத்திற்குப் பிறகு ஒரு நபரின் நிலை எப்படி இருக்கும்? இது போன்ற பல கேள்விகளையும் இப்புத்தகம் தெளிவுபடுத்துகிறது.

மக்களிடையே அச்சத்தை ஏற்படுத்தும் மரணம் குறித்த மர்மங்கள் வெளிப்படும்போது, ஒருவர் தனது வாழ்க்கையில் அத்தகைய சூழ்நிலையை எதிர்கொள்ளும் நிலையில் ஆறுதல் அடைவார்.

ஞானி புருஷர் என்பவர், உடலை விட்டும், உடலுடன் தொடர்புடைய ஒவ்வொரு தற்காலிக நிலைகளை விட்டும் விலகி இருப்பவர் ஆவார்; அவர் பிறப்பு, இறப்பிலிருந்து விடுபட்டு இருக்கிறார். அவர் இவற்றை அறிபவராகவும், காண்பவராகவும் தொடர்ந்து இருப்பதுடன், ஒருபோதும் பிறக்காத *(அஜன்ம)*, இறக்காத *(அமர்)* ஆத்ம அனுபவ நிலையில் இருக்கிறார். வாழ்க்கைக்கு முன், பின், வாழ்வின் இறுதிக் கணங்களிலும், பிறப்பு, இறப்பின்றி இருக்கும் ஆத்ம நிலையின் யதார்த்தத்தை, ஞானி புருஷர் ஞான திருஷ்டியின் மூலம் வெளிப்படையாக வெளிப்படுத்தியுள்ளார்.

ஆத்மா என்பது பிறப்புக்கும், இறப்புக்கும் அப்பாற்பட்டதாகும். ஆத்மாவின் சொரூபமானது பரம ஞான சொரூபம் *(கேவல் ஞான் ஸ்வரூப்).* ஆத்மா என்பது அறிபவனாகவும், காண்பவனாகவும் செயல்படுவது மட்டுமே. நிச்சயமாக ஆத்மா பிறப்பு அல்லது இறப்புக்குட்படுவதில்லை! இருந்தபோதிலும், புத்தியின்

மூலமாகவே, மக்கள் பிறப்பு மற்றும் இறப்பு சுழற்சியின் அனுபவத்தை அனுபவிக்கிறார்கள். எனவே இயல்பாகவே, இங்கு ஒரு முக்கிய கேள்வி எழுகிறது: பிறப்பு மற்றும் இறப்பு எவ்வாறு நிகழ்கிறது? அவை நிகழும் நேரத்தில், ஆத்மாவைத் தவிர வேறு எதுவெல்லாம் இருக்கின்றன? அவை என்னவாகும்? யார் மறுபிறவி எடுக்கிறார்? மறுபிறவி எவ்வாறு நிகழ்கிறது? பிறப்பு மற்றும் இறப்புக்கு உள்ளானவர் யார்? காரணம் மற்றும் விளைவு சுழற்சியின் தோற்றங்கள் என்ன? அதை எப்படி நிறுத்த முடியும்? மறுஜென்ம வாழ்க்கை நிலை மற்றும் கதி எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது? அதன் ஆயுட்காலம் எதன் அடிப்படையில் முடிவு செய்யப்படுகிறது? ஞானி புருஷரைத் தவிர, இது போன்ற பொதுவான கேள்விகளுக்குரிய சரியான மற்றும் திருப்திகரமான அறிவியல் பதில்களை யாரால் வழங்க முடியும்?

மேலும், ஆத்மா பல்வேறு வாழ்க்கை கதிகளில் பிரவேசம் செய்வதற்கான சட்டங்கள் யாவை? தற்கொலைக்கான காரணங்கள் மற்றும் விளைவுகள் என்ன? ப்ரேதம் (பசி மற்றும் தாகத்தால் இடைவிடாது சித்திரவதை செய்யப்படுகின்ற உடலற்ற உயிரினங்கள்) வாழ்க்கை கதி என்ன? பேய் என்ற ஒன்று உண்டா? ஒரு உயிரின் இருப்பிட மாற்றத்தைக் கட்டுப்படுத்தும் சட்டங்கள் யாவை? பல்வேறு உயிரின வாழ்க்கை கதிகளை அடைவதற்கான அடிப்படை என்ன? பல்வேறு கதிகளை அடையும் நிலையிலிருந்து ஒருவர் எவ்வாறு மோட்சம் பெற முடியும்? மோட்சம் அடையும் ஆத்மா எங்கே செல்கிறது? சித்த கதி (இறுதி மோட்சம் அடைந்து, முற்றிலும் விடுவிக்கப்பட்ட ஆத்மா அடைகிற கதி) என்றால் என்ன? இக்கேள்விகள் அனைத்திற்கும் விரிவான பதில்கள் இந்தப் புத்தகத்தில் இடம்பெறுகின்றன.

ஞானியைத் தவிர வேறு எவராலும், ஆத்மா மற்றும் அஹங்காரத்தைப் பற்றிய புரிதலை இவ்வளவு துல்லியமாகவும் விரிவாகவும் விளக்க முடியாது!

பிறப்பு மற்றும் இறப்பற்ற நிலையை அடைவதற்கான அனைத்து விளக்கங்களும் இத்தொகுப்பில் துல்லியமாக கொடுக்கப்பட்டுள்ளன. வாசகருக்கு உலக வாழ்க்கை தொடர்புகள் மற்றும் ஆன்மீகத்தில் முன்னேற இது உதவுகிறது.

**-டாக்டர் நிருபன் அமீன்**

# மரணம்

## முன், பின் மற்றும் நிகழும் போது...

### 1. மரணத்தை சூழ்ந்துள்ள அறியப்படாத மர்மங்களை பற்றிய விளக்கம்

#### பிறப்பு மற்றும் இறப்பிலிருந்து விடுதலை பெறுதல்

**கேள்வி கேட்பவர்:** பிறப்பு மற்றும் இறப்பின் சுழற்சியிலிருந்து ஒருவரால் எவ்வாறு விடுபட முடியும்?

**தாதாஸ்ரீ:** இது ஒரு நல்ல கேள்வி. உங்கள் பெயர் என்ன?

**கேள்வி கேட்பவர்:** சந்துபாய். (இந்த பெயர் வரும் இடங்களில் வாசிப்பவர் தனது பெயரை பொருத்திக்கொள்ள வேண்டும்)

**தாதாஸ்ரீ:** நீங்கள் உண்மையில் சந்துபாய் தானா?

**கேள்வி கேட்பவர்:** ஆம்.

**தாதாஸ்ரீ:** சந்துபாய் என்பது உங்கள் பெயர் தானே?

**கேள்வி கேட்பவர்:** ஆம்.

**தாதாஸ்ரீ:** அப்படியானால் நீங்கள் யார்? உங்கள் பெயர் சந்துபாய் என்பதை நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். ஆனால், நீங்கள் யார்?

**கேள்வி கேட்பவர்:** அதை தெரிந்து கொள்வதற்குத்தான் நான் இங்கு வந்துள்ளேன்.

**தாதாஸ்ரீ:** நீங்கள் அதை தெரிந்து கொண்டதும், பிறப்பு மற்றும் இறப்பின் சுழற்சியிலிருந்து விடுபட்டு விடுவீர்கள்.

இதுவரை, நீங்கள் செய்யும் செயல்கள் அனைத்தும் சந்துபாய் எனும் பெயரால் செய்யப்பட்டுள்ளன, இல்லையா? ஏய், இது துரோகமில்லையா! உங்களுக்காக (ஆத்ம சொரூபத்திற்காக) குறைந்தபட்சம் எதையாவது வைத்திருக்க வேண்டாமா?

இறுதி ஊர்வலத்திற்கு அழைத்துச் செல்லப்படுவது இயற்கையின் அபகரிப்பு அல்லவா! இது எந்த வகையான அபகரிப்பு? ஒருவரின் பெயரில் இருக்கும் வங்கி இருப்பு அவரிடமிருந்து பறிக்கப்படும். குழந்தைகள் பறிக்கப்படுகின்றன. வீடு பறிமுதல் செய்யப்படும். ஒருவரின் சொந்த ஆடைகள் கூட பறிமுதல் செய்யப்படுகின்றன! ஆக, அனைத்தும் பறிமுதல் செய்யப்படுகிறது. "ஐயா, இப்போது நான் என்னுடன் அங்கு எதைக் கொண்டு செல்வேன்?" என்று ஒருவர் கேட்கலாம். அதற்கான பதில், "நீங்கள் மக்களுடன் உருவாக்கிய அனைத்து சிக்கல்களையும் நீங்கள் எடுத்துச் செல்வீர்கள்" என்பதாகும். எனவே, ஒருவரது பெயரில் உள்ள அனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டுவிடும். எனவே, உங்களுக்காக நீங்கள் ஏதாவது செய்ய வேண்டாமா? இல்லையா?

## மறு ஜென்மத்திற்கான மூட்டை முடிச்சுகளை எடுத்துச் செல்லுதல்

உங்கள் உறவினர்களைத் தவிர மற்றவர்களுக்கு நீங்கள் உதவுவதன் மூலமோ அல்லது அவர்களுக்கு ஏதாவது கொடுப்பதன்

மூலமோ அவர்களை நீங்கள் மகிழ்வித்தால், அதன் பலன் அடுத்த ஜென்மத்தில் உங்களை அடையும். உங்கள் உறவினர்களைத் தவிர, நீங்கள் மற்றவர்களுக்கு மருந்து, உணவு மற்றும் அறிவு ஆகியவற்றை தானம் செய்து, எந்த உயிருக்கும் பயம் அல்லது துன்பம் ஏற்படாத வகையில் நீங்கள் நடந்து கொண்டால் (அபய தானம்), அதன் பலன் உங்களை அடுத்த ஜென்மத்தில் அடையும். நீங்கள் இவற்றில் ஏதாவது ஒன்றை தானம் செய்கிறீர்களா அல்லது உங்களுக்காகவே அவற்றை வைத்துக் கொள்கிறீர்களா?

ஒருவரால் அடுத்த ஜென்மத்திற்குத் தன்னுடன் பொருட்களை எடுத்துச் செல்வது சாத்தியமாயிருந்தால், மக்கள் மூன்று லட்சம் ரூபாய் கடனைக் கூடப் பெற்றுக் கொண்டு, எல்லாவற்றையும் எடுத்துச் செல்வார்கள்! சரி! சரி! இந்த உலகம் இப்படித் தான் இயங்குகிறது. அதனால், யாராலும் எதையும் தன்னுடன் எடுத்துச் செல்ல முடியாது என்பது நன்மைக்கே.

## மாயையின் மாய விளையாட்டு

மாயை (நான் சந்துபாய் என்ற தவறான புரிதல்) தான் ஒருவரை பிறக்க வைக்கிறது, மாயை தான் ஒருவரை திருமணம் செய்ய வைக்கிறது, மாயை தான் ஒருவரை இறக்கவும் வைக்கிறது. ஒருவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், வேறு வழியில்லை. இருப்பினும், ஒன்று மட்டும் நிச்சயம், முழு சக்தியும் இந்த மாயைக்கு இல்லை. நீங்கள் (ஜீவாத்மா-அறியாமை நிலையில் இருக்கும் ஆத்மா) தான் உரிமையாளர். எனவே, உங்களின் ஆசைகளின்படியே எல்லாம் நிகழ்கிறது. உங்களுடைய முன் ஜென்மத்தில் நீங்கள் கொண்டிருந்த ஆசைகளின் அடிப்படையில் ஒரு இருப்புநிலைக் குறிப்பு தயாரிக்கப்பட்டது. அந்த இருப்புநிலைக்

குறிப்பின் அடிப்படையில் தான், மாயை இப்போது எல்லாவற்றையும் இயக்குகிறது. எனவே, இப்போது புகார் செய்வதில் எந்த அர்த்தமும் இல்லை. நீங்கள் தான் மாயையிடம், 'இது என்னுடைய இருப்பு நிலைக் குறிப்பு' என்று கூறியிருக்கிறீர்கள்.

## வாழ்க்கை ஒரு சிறைச்சாலை

**கேள்வி கேட்பவர்:** உங்கள் பார்வையில் வாழ்க்கை என்றால் என்ன?

**தாதாஸ்ரீ:** என் கருத்துப்படி, வாழ்க்கை என்பது ஒரு சிறை, சிறை! அதில் நான்கு வகையான சிறைகள் உள்ளன.

அதில் ஒருவகையான சிறை வீட்டுக்காவல் சிறை. தேவலோகத்தில் உள்ளவர்கள் வீட்டுக்காவல் சிறையில் உள்ளனர். மனிதர்கள் சாதாரண சிறையில் இருக்கிறார்கள். விலங்குகள் கடுங்காவல் சிறைச்சாலையில் உள்ளன, மற்றும் நரகத்தில் இருப்பவர்கள் ஆயுட்கால சிறையில் உள்ளனர்.

## பிறந்த நேரத்தில் இருந்தே கோடாரி வெட்டிக் கொண்டே இருக்கிறது

இந்த உடல் ஒவ்வொரு நொடியும் இறந்து கொண்டிருக்கிறது. ஆனால், மக்கள் இதை உணர்கிறார்களா? ஆனால், ஒரு மரக்கட்டை இரண்டாகப் பிளந்து விழுந்தால், "அது பிளந்துவிட்டது" என்கிறோம். ஏய், அந்த மரக்கட்டை தினமும் வெட்டுப்பட்டுக் கொண்டு இருந்தது, உண்மையில் கோடாரி அதை வெட்டிக் கொண்டே இருந்தது.

## மரணம் குறித்த அச்சம்

இவ்வுலகில் எப்போதும் அச்சம் இருந்து கொண்டே இருக்கிறது. இந்த உலகில் ஒரு கணம் கூட அச்சமின்மை என்பது இருப்பதில்லை. ஒருவன் எந்த விஷயத்தில் அச்சமற்ற தன்மையை உணர்கிறானோ, அந்த அளவிற்கு மாயையின் பிணைப்பால் *(மூர்ச்சா)* எழும் பெரும் அறியாமையில் அவன் இருக்கிறான். மக்கள் கண்களைத் திறந்து கொண்டே தூங்குகிறார்கள். அதனால்தான், இவை அனைத்தும் தொடர்கின்றன.

**கேள்வி கேட்பவர்:** ஆத்மா ஒருபோதும் இறப்பதில்லை. அது எப்போதும் உயிர் வாழ்கிறது என்று கூறப்படுகிறதே?

**தாதாஸ்ரீ:** ஆத்மா ஒருபோதும் இறப்பதில்லை. ஆனால், நீங்கள் ஆத்மா என்ற நிலையை அடையாத வரை, நீங்கள் தொடர்ந்து பயத்தை உணர்கிறீர்கள், இல்லையா? உங்களுக்கு மரண பயம் ஏற்படுகிறது. இல்லையா? உடம்பில் ஏதேனும் நோய் ஏற்படும் போது, 'நான் இந்த உடலை விட்டுச் செல்வேன், நான் இறந்துவிடுவேன்' என்ற பயம் எழுகிறது. 'இது என்னுடைய உடல்' என்ற புரிதல் இல்லையென்றால், நீங்கள் இறக்க மாட்டீர்கள். அது போலவே, 'உண்மையில் இது என்னுடைய உடல், நான் இந்த உடலைத் தவிர வேறொன்றுமில்லை' என்று நூறு சதவிகிதம் (உறுதி) உங்களுக்கு இருக்கிறது. 'நான்தான் சந்துபாய்' என்பதில் உங்களுக்கு நூறு சதவிகிதம் உறுதி இருக்கிறது, இல்லையா?

## எமதர்மராஜாவா? நியமராஜாவா?

இந்தியாவில் உள்ள இந்த மூடநம்பிக்கைகளை எல்லாம் நான் ஒழிக்க விரும்புகிறேன். இந்த மூடநம்பிக்கைகளால் நாடு

முழுவதும் சீர்கெட்டு விட்டது. எமதர்மராஜா (இந்து மதபுராணத்தில் உயிரை எடுக்கும் கடவுள்) என்று யாரும் இல்லை என்று நான் உறுதியுடன் சொல்கிறேன். மக்கள் என்னிடம், "அப்படியானால், அது என்ன? ஏதாவது இருக்க வேண்டும், இல்லையா?" என்று கேட்கின்றனர். அதற்கு நான், "அது *நியமராஜாவாக* (இயற்கையின் நியதி) இருக்கின்றது" என்று பதிலளிக்கிறேன். எனவே, இதை நான் (அகப்பார்வையால்) பார்த்தே சொல்கிறேன். நான் படித்ததை வைத்து எதையும் கூறவில்லை. இதையெல்லாம் நான் எனது அகப்பார்வையில் (ஆத்ம நிலையில்) பார்ப்பதன் அடிப்படையிலேயே கூறுகிறேன், இந்த (பூத உடலின்) கண்களால் அல்ல. என் அகப்பார்வையில் நான் பார்ப்பதை அடிப்படையாகக் கொண்டே பேசுகிறேன்.

## மரணத்திற்கு பின் என்ன நடக்கிறது?

**கேள்வி கேட்பவர்:** மரணத்திற்குப் பிறகு எந்த வாழ்க்கை கதிநிலையை நான் அடைவேன்?

**தாதாஸ்ரீ:** வாழ்நாள் முழுவதும் நாம் செய்த அனைத்து செயல்கள், இவ்வுலகில் நடத்தப்பட்ட அனைத்து வியாபாரங்கள் ஆகியவற்றின் இருப்புநிலைக் குறிப்பு மரணத்தின் போது வெளியாகிறது. இறப்பதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன், இந்த இருப்புநிலைக் குறிப்பு வழங்கப்படுகிறது. ஒருவர் தனக்கு உரிமையில்லாததை எடுத்துக் கொண்டாலோ, அதாவது தனக்குச் சொந்தமில்லாத பணத்தைப் பெற்றாலோ, தகாத உறவைக் கொண்டிருந்தாலோ, அல்லது தனக்குச் சொந்தமில்லாத எதையும் புத்தியின் மூலமோ அல்லது வேறு ஏதாவது வகையில் எடுத்துக் கொண்டாலோ, அதன் விளைவாக அவர் ஒரு விலங்கு கதியில் மறு

ஜென்மம் எடுப்பார். அதேசமயம், ஒருவர் தமது வாழ்நாள் முழுவதும் பண்பாடான நடத்தையைப் பேணி வாழ்ந்திருந்தால், அவர் மனித கதியில் மறு ஜென்மம் அடைவார். நான்கு வகையான வாழ்க்கை கதிகள் மட்டுமே உள்ளன; ஒருவர் இறந்த பிறகு இந்த நான்கில் ஏதேனும் ஒன்றை அடைகிறார். தங்கள் சுய லாபத்திற்காக ஒரு முழு ஊரையே தீயிட்டுக் கொளுத்துபவர்கள் இருக்கிறார்கள்; அத்தகையவர்கள் இங்கே இருக்கிறார்கள், இல்லையா? இதன் விளைவாக, அவர்கள் நரககதியைப் பெறுவார்கள். அதேசமயம் தெய்வீக மனித குணங்களை கொண்டவா்களும் இருக்கிறாா்கள், இவா்கள் பிறரால் துன்புறுத்தப்பட்டாலும் நன்மையே செய்பவா்கள்; தேவலோக கதியை அடைகிறார்கள்.

## பிறருக்கு சேவை செய்வதில் முழுமையாக ஈடுபடுங்கள்

உங்களுடைய மனம், பேச்சு, உடல் மற்றும் (சாா்ந்த) ஆத்மாவை பிறருக்காகப் பயன்படுத்துங்கள். நீங்கள் அவற்றை உங்களுக்காகப் பயன்படுத்தினால், ஒரு மரத்தின் வாழ்க்கை நிலையை நீங்கள் பெறுவீர்கள். அதனால் நீங்கள் ஐநூறு வருடங்கள் துன்பப்படுவீர்கள். மக்கள் உங்கள் பழங்களை உண்டு அனுபவித்து, உங்களின் மரக்கட்டைகளை எரிப்பார்கள். பின்னர், நீங்கள் சிறைப்பட்ட வடிவில் மற்றவர்களால் பயன்படுத்தப்படுவீர்கள். இதனால்தான் பகவான், “உங்கள் மனம், பேச்சு, உடல் மற்றும் சாா்ந்த ஆத்மாவின் விழிப்புணர்வு பிரயோகம் மற்றவர்களுக்காக பயன்படுத்துங்கள். அதன்பிறகு, உங்களுக்கு ஏதேனும் துன்பம் வருமானால், அதை எனக்குத் தெரிவியுங்கள்”, என்று கூறுகிறாா்.

## அவர்கள் வேறு எங்கு செல்வார்கள்?

**கேள்வி கேட்பவர்:** உடலை விட்டு வெளியேறிய பிறகு, ஒருவர் மீண்டும் இங்கு வர வேண்டுமா?

**தாதாஸ்ரீ:** வேறு எங்கும் செல்வதற்கு வழியில்லை. இங்கே நமக்கிடையே இருந்து, வசித்து, நாம் உணவளித்து, தண்ணீர் கொடுக்கப்பட்டு, நம்மையே பார்த்துக்கொண்டு, நம்மை அடையாளம் காணும் எருதுகள், மாடுகள், நாய்கள் மற்றும் இதர விலங்குகள் அனைத்தும் நம்முடைய சொந்த மாமாக்கள், அத்தைகள் மற்றும் உறவினர்களே தவிர வேறு யாருமில்லை. இந்த விலங்குகள் அவர்களே தான். அவர்கள் உண்மையில் இங்கேயே இருக்கிறார்கள். எனவே, அவற்றை துன்பப்படுத்தவோ அல்லது தீங்கு விளைவிக்கவோ வேண்டாம். அந்த விலங்குகளுக்கு உணவளிக்கவும். உங்களுக்கு நெருக்கமான அந்த விலங்குகள் உங்கள் சொந்த உறவினர்களே. அவை சில சமயம் உங்களை நாவினால் நக்க முயற்சி செய்யலாம்; ஒரு காளை கூட உங்களை நாவினால் நக்கக்கூடும்.

## இருவழிப் பயணச்சீட்டு

**கேள்வி கேட்பவர்:** ஒருவர் ஏன் பசுவாகவோ அல்லது எருமையாகவோ மனித வாழ்க்கைக்கு இடையில் மறுபிறவி எடுக்கிறார்?

**தாதாஸ்ரீ:** எண்ணற்ற வாழ்க்கையாகவே, இந்த மக்கள் அனைவரும் பசுக்கள் மற்றும் எருமைகளின் வாழ்க்கை நிலையிலிருந்து வந்துள்ளார்கள். மேலும் இங்கிருந்து புறப்படப் போகிறவர்களில், சுமார் பதினைந்து சதவீத மக்களைத் தவிர, மற்ற அனைவருமே அங்கே (கீழ்நிலை வாழ்க்கை கதிக்கு) செல்ல

பயணச்சீட்டு எடுத்து வந்துள்ளனர். யார் யார் அந்த பயணச்சீட்டு வாங்கி கொண்டு வந்திருக்கிறார்கள்? கலப்படம் செய்யப்பட்ட பொருட்களை விற்பவர்கள், தமக்குச் சொந்தமில்லாததை பலவந்தமாக எடுத்து அனுபவிப்பவர்கள், விலங்கு கதியை பெறுவார்கள்.

## கடந்த பிறவிகளின் மறதி

**கேள்வி கேட்பவர்:** நமது கடந்தகால வாழ்க்கையிலிருந்து நாம் ஏன் எதையும் நினைவில் கொள்வதில்லை? அது நம் நினைவில் இருந்தால் என்ன நடக்கும்?

**தாதாஸ்ரீ:** மரணத்தின் போது எந்த சிரமத்தையும் அனுபவிக்காதவர்கள் சிலநேரம் தங்கள் கடந்த கால பிறவியை நினைவு கொள்ளலாம். மேலும் நல்லொழுக்க எண்ணங்கள் மற்றும் நன்நடத்தை உடையவர்களும் நினைவு கொள்ளலாம். ஏதனால் மறதி ஏற்படுகிறது என்றால், தாயின் வயிற்றில் நமக்கு கடுமையான வலி ஏற்படுகிறது. இந்த வலியும், மரணத்தின் போது உண்டாகும் வலியும் இணைந்து ஒருவரை மயக்கமடையச் செய்துவிடுகிறது.

## இறுதி நேரத்தில் மூட்டை முடிச்சுகளை தயார் செய்துகொள்ளுங்கள்

எண்பது வயது முதியவர் ஒருவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். இரண்டு அல்லது நான்கு நாட்களில் அவர் இறந்துவிடுவார் என்று எனக்குத் தெரியும். ஆனால், அப்போதும் அவர் என்னிடம், “அந்த மகன்லால் என்னைப் பார்க்கக்கூட வரவில்லை” என்று கூறினார். மகன்லால் ஏற்கனவே வந்துவிட்டாரே என்று நான் அவரிடம் கூறினால், “அந்த நகிந்தாஸ் வரவில்லையே?”

என்று கேட்கிறார். படுக்கையில் படுத்துக்கொண்டு, தன்னை யாரெல்லாம் பார்க்க வந்தார்கள் என்பதை மனதளவில் பதிவு செய்துகொண்டிருந்தார். ஹே, முதலில் உங்கள் உடலை கவனித்துக் கொள்ளுங்கள்! இன்னும் சில நாட்களில் நீங்கள் இறக்கப் போகிறீர்கள். முதலில், உங்கள் 'மூட்டை முடிச்சுகளை' தயார் செய்து கொள்ளுங்கள். குறைந்தபட்சம் நீங்கள் எடுத்துச் செல்லும் மூட்டை முடிச்சுகளை சேகரியுங்கள். நகிந்தாஸ் உங்களைப் பார்க்க வராததால், இப்போது என்ன ஆயிற்று?

## மேலோட்டமான விளக்கம் கொடுங்கள்

உங்களுடைய வயதான மாமா உடல்நிலை சரியில்லாமல் இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம், நீங்கள் ஒரு மருத்துவரை அழைத்து, அவருக்கு தேவையான அனைத்து சிகிச்சைகளையும் அளிக்கிறீர்கள் இருந்தாலும், அவர் இறந்துவிடுகிறார். பின்னர், மக்கள் அவருடைய இறுதிச் சடங்கிற்கு வருவார்கள். அவர்களில் சிலர் ஆறுதல் கூற வருவார்கள். "உன் மாமாவுக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்பார்கள். நீங்கள் அவர்களிடம், "மலேரியா காய்ச்சல் என்று முதலில் நினைத்தோம். ஆனால், அது காய்ச்சல் (இன்ஃபுளுவென்சா) என்று மருத்துவர் கூறினார்!" என்று கூறுவீர்கள். பிறகு, "எந்த டாக்டரை அழைத்தீர்கள்?" என்று அவர்கள் கேட்பார்கள். எனவே, நீங்கள் அந்த மருத்துவரின் பெயரை அவர்களிடம் கூறுவீர்கள். அவர்கள், "உனக்கு புத்தி இல்லை. நீ இவரை விட்டுவிட்டு அந்த மருத்துவரை அழைத்திருக்க வேண்டும்" என்று கூறுவார்கள். அப்போது இன்னொரு நபர் உங்களிடம் வந்து, "நீங்கள் இப்படிச் செய்திருக்க வேண்டும்! நீங்கள் சொல்வதெல்லாம் முற்றிலும் அர்த்தமற்றது!" என்று கூறுவார். எனவே, மக்கள் உங்களை நாள்

முழுவதும் திட்டுவார்கள்! மாறாக, இந்த மக்கள் எல்லை மீறவும் செய்வார்கள். அவர்கள் உங்கள் வெளிப்படைத் தன்மையைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். எனவே, நான் உங்களுக்குக் கொடுக்கும் உபதேசம் என்னவென்றால், மறுநாள் மக்கள் உங்களுக்கு ஆறுதல் சொல்ல வரும்போது, “என் மாமாவுக்கு காய்ச்சல் வந்து இறந்துவிட்டார். அசாதாரணமாக எதுவும் நடக்கவில்லை” என்று கூறிவிடுங்கள். அவர்கள் கேட்கும் போது இந்த பதிலை சொல்லுங்கள். நீங்கள், அவர்களிடம் அனைத்து விவரங்களையும் கொடுத்தால், அது சிக்கல்களுக்கு வழிவகுக்கும் என்பது உங்களுக்கும் தெரியும். அதற்கு பதிலாக, “அவருக்கு இரவில் காய்ச்சல் வந்தது, காலையில் அவர் இறந்துவிட்டார்” என்று சொல்லுங்கள். பின்னர், உங்களுக்கு எந்த சிக்கலும் இருக்காது, அல்லவா!

## மரண நேரத்தில் உறவினர்களை அக்கறையுடன் கவனித்துக் கொள்ளுதல்

**கேள்வி கேட்பவர்:** உறவினர் ஒருவர் தனது வாழ்நாளின் முடிவை நெருங்கிக் கொண்டிருக்கும்போது, அவரைச் சுற்றியுள்ள குடும்ப உறுப்பினர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

**தாதாஸ்ரீ:** வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தை நெருங்கும் ஒருவரை நாம் நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். அவர் சொல்வதையெல்லாம் மனதாரச் செய்யுங்கள். அவர் எதிர்மறையாக உணராதபடி எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளுங்கள். எல்லோரும் அவரை மகிழ்ச்சியாக வைத்திருக்க வேண்டும், அவர் ஏதாவது வெளிப்படையாக புண்படுத்தும் வகையில் ஏதேனும் சொன்னாலும், “நீங்கள் சொல்வது சரிதான்!” என்று சொல்லி அதை ஏற்றுக்கொள்ள

வேண்டும். “எனக்கு கொஞ்சம் பால் கொடுங்கள்” என்று அவர் சொன்னால், நீங்கள் உடனடியாக அதைச் செய்ய வேண்டும். “இந்த பால் கெட்டியாக இல்லை, தண்ணீராக இருக்கிறது, எனக்கு குவளையில் கெட்டி பாலை கொண்டு வாருங்கள்!” என்று அவர் புகார் செய்யலாம். உடனே, நீங்கள் இன்னும் கொஞ்சம் பாலை சூடாக்கி, “இது நன்றாக இருக்கிறது” என்று சொல்லி அவருக்குப் பரிமாற வேண்டும். ஆகவே, அவருக்கு வசதியாக இருக்க என்ன வேண்டுமானாலும் செய்ய வேண்டும். நீங்கள் அவருக்கு ஆறுதலான வார்த்தைகளைச் சொல்ல வேண்டும்.

**கேள்வி கேட்பவர்:** அப்படியானால் எது சரி, எது தவறு என்று கவலைப்படத் தேவையில்லையா?

**தாதாஸ்ரீ:** இந்த உலகில் சரி, தவறு என்று எதுவும் இல்லை. அவர் எதை விரும்புகிறாரோ, அப்படியே செய்யுங்கள், அதுதான் முக்கியம். அவர் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் நீங்கள் நடந்து கொள்ளுங்கள். சிறு குழந்தையுடன் எப்படி நடந்து கொள்கிறீர்கள்? ஒரு சிறு குழந்தை குடிக்கும் கண்ணாடிக் குவளையை உடைத்தால், நீங்கள் அந்த குழந்தையை திட்டுவீர்களா? ஒரு இரண்டு வயது குழந்தையாக இருந்தால், “ஏன் உடைத்தாய்?” என்று திட்டுவீர்களா? சிறு குழந்தையுடன் நடந்து கொள்வது போல் அவரிடம் நடந்து கொள்ளுங்கள்.

## மனிதனின் மரண தருவாயில் ஆன்மீக அகநிலை

**கேள்வி கேட்பவர்:** மரண தருவாயில், சில லாமாக்கள் (திபெத்திய புத்த மதத்தில் தர்ம போதகருக்கு வழங்கப்படும் பதவி) சில செயல்களைச் செய்கின்றனர். திபெத்திய லாமாக்கள் ஒரு நபர்

மரணப் படுக்கையில் இருக்கும்போது, இறக்கும் நபரின் ஆத்மா எவ்வாறு இந்த உலகை விட்டு வெளியேற வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்கள். அதேபோல், சிலர் பகவத் கீதையை ஓதுவார்கள். இதனால், இறக்கும் நபர் நல்ல வார்த்தைகளைக் கேட்கிறார். இது இறுதி நேரத்தில் அந்த நபருக்கு ஏதேனும் உதவியாக இருக்குமா?

**தாதாஶ்ரீ:** இதன் மூலம் எதையும் அடைய முடியாது. வருடத்தின் முடிவில் லாபம் ஈட்டுவதன் மூலம், அதுவரை ஏற்பட்ட அனைத்து நஷ்டங்களையும் புறக்கணித்து, அந்த ஆண்டு முழுவதும் ஏற்பட்ட அனைத்து நஷ்டங்களையும் ஈடுகட்ட முடியுமா?

**கேள்வி கேட்பவர்:** இல்லை, முடியாது.

**தாதாஶ்ரீ:** ஏன் முடியாது?

**கேள்வி கேட்பவர்:** இருப்புநிலைக் குறிப்பு, ஆண்டு முழுவதும் நடத்தப்பட்ட அனைத்து பரிவர்த்தனைகளையும் பிரதிபலிக்கும்!

**தாதாஶ்ரீ:** அதைப் போலவே, இறப்பின் மூலம் முழு வாழ்க்கையின் இருப்புநிலைக் குறிப்பு பெறப்படுகிறது. (மரண வேளையில் இது போன்ற செயல்களைச் செய்வதன் மூலம் மக்கள்) இறக்கும் தருவாயில் இருப்பவர்களை ஏமாற்றுகிறார்கள். அவர்கள் தங்களையே முட்டாளாக்குகிறார்கள்.

**கேள்வி கேட்பவர்:** தாதா, ஒருவர் மரணப் படுக்கையில் சுயநினைவில் இருக்கும் போது, அந்த நேரத்தில் யாரேனும் கீதை அல்லது வேறு ஏதேனும் ஒரு வேதத்தை ஓதி, அவர் இறக்கும் தருவாயில் உள்ளவரின் காதுகளில் எதையாவது உச்சரித்தால்...

**தாதாஸ்ரீ:** இறக்கும் நிலையில் இருப்பவரின் வேண்டுகோளின்படி மட்டுமே அதை செய்ய வேண்டும். அவருக்கு விருப்பம் இருந்தால் மட்டும், அவர் அதைக் கேட்கட்டும்.

## கருணைக் கொலை

**கேள்வி கேட்பவர்:** ஒரு நபர் நீண்டகாலமாக வேதனையை அனுபவித்து, வலியுடன் இருக்கும்போது, நாம் அனுபவிக்கட்டும் என்று விட்டுவிடுவது; மற்றும் நாம் அவரை கொலை செய்து விட்டாலோ, அந்த நபர் அவருடைய அடுத்த ஜென்மத்தில் வேதனையை அனுபவித்து ஆகவேண்டும் என்றும் கூறப்படுகிறது. இது சரியென்று தோன்றவில்லை. அவர் நீண்ட காலமாக வேதனையில் இருந்தால், அந்த வேதனை ஒரு முடிவுக்கு வர வேண்டும் அல்லவா, அதில் என்ன தவறு இருக்கிறது?

**தாதாஸ்ரீ:** அதைச் செய்ய யாருக்கும் உரிமை இல்லை. பிறரை நல்ல முறையில் நடத்துவதற்கும், கவனித்துக் கொள்வதற்கும் நமக்கு உரிமை உண்டு. ஆனால், அவர்களைக் கொலை செய்ய நமக்கு எந்த உரிமையும் இல்லை.

**கேள்வி கேட்பவர்:** ஆனால், இதைச் செய்வதால் நமக்கு என்ன பயன்?

**தாதாஸ்ரீ:** அப்படியானால், அவர்களைக் கொலை செய்வதில் என்ன பலன் இருக்கிறது? நீண்டகால வேதனையில் இருக்கும் ஒருவரை நீங்கள் கொலை செய்தால், மீண்டும் மனிதனாக பிறக்கும் பிறப்புரிமையை நீங்கள் இழந்துவிடுவீர்கள். மேலும், அந்த செயல் மனிதநேயக் கொள்கைகளுக்கு புறம்பானது. அது மனிதநேயக் கொள்கைகளுக்கு எதிரானது.

## உறவுகள் தொடர்வது, சுடுகாடு வரை மட்டுமே

இங்கே இந்த தலையணை இருக்கிறது; தலையணையின் உறை மாறிக்கொண்டே இருக்கும். ஆனால், தலையணை அப்படியே இருக்கும். தலையணையின் உறை கிழிந்தவுடன், அந்த உறை தூக்கி எறியப்படும். அதேபோல, இந்த ‘உறை’ (உடல்) நிலை மாறிக்கொண்டே இருக்கும்.

இந்த உலகம் உண்மையற்றது. இருப்பினும், உலக தொடர்புகளில் உள்ள ஒருவரிடம் இதை வெளிப்படையாகச் சொல்ல முடியாது. அப்படி கூறினால், மற்றவர்கள் துக்கப்படுவார்கள். ஆயினும்கூட, யாரும் தான் நேசித்தவரின் சவக்குழிக்குள் விழுந்ததில்லை. உடல் அடக்கம் செய்யப்பட்டவுடன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் வீடு திரும்பி விடுகிறார்கள். அவர்கள் அனைவரும் விவேகமானவர்கள். மிகவும் துக்கத்துடன் இருக்கும் தாயும் கூட வீடு திரும்பிவிடுகிறார்.

**கேள்வி கேட்பவர்:** மேலும், இறந்தவர் குடும்பத்திற்கு எதையும் உயில் எழுதி வைக்கவில்லை என்றால், தங்களுக்கென்று எதையும் விட்டுச் செல்லவில்லை என்றால், அவர்கள் அழுது புலம்புவார்கள். மற்றும் அவர் அவர்களுக்கு போதுமான செல்வங்களை விட்டுச் சென்றால், அவர்கள் அமைதியாக இருந்துவிடுகிறார்கள்.

**தாதாஸ்ரீ:** ஆம், அப்படித்தான்! அவர் தங்களுக்கென்று எதையும் விட்டுச் செல்லவில்லை என்றால், அவர்கள் கண்ணீர் விடுகின்றனர். தங்களுக்குள்ளேயே அவர்கள் கூறிக்கொள்வார்கள், “இவர் இறந்து, நம்மையும் கொல்கிறாரே! இவர் நமக்கென்று

எதையும் விட்டுவைக்கவில்லை. இப்போது நம்மையும் கொல்கிறாரே!” என்று. ஆனால், இறந்தவர் அவர்களுக்கு எதையும் விட்டுச் செல்லாததற்கு காரணம், அவருடைய மனைவிக்கு போதுமான புண்ணிய கர்மா இல்லாததே ஆகும். இருப்பினும், இறந்த மனிதருக்கு வார்த்தைகளால் துஷ்பிரயோகம் செய்யப்படுவதற்கென்று விதி எழுதப்பட்டிருப்பதால், அவரை தாழ்ச்சியுடையவராக கருதுகிறார்கள்!

மேலும், நம்மை சுற்றியுள்ள மக்கள் சுடுகாட்டுக்கு ஒருமுறை சென்ற பின், மறுமுறை அவர்கள் அங்கு திரும்பி போவதில்லை, இல்லையா? அல்லது அவர்கள் அனைவரும் அங்கு திரும்பி செல்கிறார்களா? எனவே, இவை அனைத்தும் ஒரு வெளித் தோற்றதிற்காகவே! ஒருவரின் மரணத்தின் போது, மக்கள் அழுதாலும் விமர்சிக்கிறார்கள். மேலும் அழாமல் இருந்தாலும் விமர்சிக்கிறார்கள். அவர்கள் துக்கத்தால் அளவுக்கு அகதிகமாக அழும்போது, மக்கள் அவர்களிடம், “மற்றவர்களின் குடும்ப உறுப்பினர்கள் இறப்பதில்லையா, நீங்கள் ஏன் இப்படி அழுகிறீர்கள்? உனக்கு இந்த விஷயம் கூட புரியவில்லையா?” என்று கேட்கிறார்கள். அவர்கள் அழவில்லையென்றால், மக்கள், “உங்களுக்கென்ன கல் நெஞ்சமா? உங்கள் இதயம் கல்லால் ஆனதா!” என்று விமர்சிக்கிறார்கள். எனவே, ஒருவர் என்ன செய்தாலும், அதில் ஒரு சிக்கல் வந்து விடுகிறது! எல்லாம் சரியான முறையில் இருக்க வேண்டும் என்பதைத்தான் அவர்கள் (உலக மக்கள்) சொல்ல வருகிறார்கள்.

சுடுகாட்டில் உடலை தகனம் செய்துவிட்டு இந்த மக்கள், அருகில் உள்ள உணவகத்திற்குச் சென்று தேநீர், சிற்றுண்டி

சாப்பிடுகின்றனர். அல்லவா?

**கேள்வி கேட்பவர்:** அவர்கள் உண்மையில் சிற்றுண்டிகளை அவர்களுடன் எடுத்துச் செல்கிறார்கள்!

**தாதாஸ்ரீ:** அப்படியா! என்ன வார்த்தை சொல்லுகிறீர்கள்? இதுதான் உலகம். இந்த உலகம் இப்படித்தான்! இப்படிப்பட்ட உலகில் ஒருவர் என்ன செய்ய முடியும்?

மக்கள் ‘வருக வருக’ மற்றும் ‘மீண்டும் வருக’ போன்ற வார்த்தைகளை கூறுவார்கள், ஆனால் அவர்கள் அதை மனமுவந்து கூறுவதில்லை. நீங்கள் அதை உண்மை என்று எடுத்துக் கொள்கிறீர்களா? உங்கள் மனைவிக்காகவோ அல்லது வேறு யாருக்காகவோ கூட நீங்கள் இதுபோன்ற வார்த்தைகளை மனதார கூறமாட்டீர்கள் இல்லையா?

**கேள்வி கேட்பவர்:** இல்லை.

**தாதாஸ்ரீ:** ஓ, அப்படியா! ஒரு மனிதர் தன் மனைவியை நேசிக்கிறார், அவள் இல்லாமல் தன்னால் வாழ முடியாது என்றும் அவளிடம் கூறுகிறார். ஆனால் அவளுடன், அவளுடைய சவக்குழிக்குள் இவர் செல்வாரா? அப்படி யாராவது செய்வார்களா?

## முதலாம் ஆண்டு நினைவு நாளில்

**கேள்வி கேட்பவர்:** குடும்ப உறுப்பினரின் நினைவு நாளில் குடும்ப உறுப்பினர்கள் என்ன செய்ய வேண்டும்?

**தாதாஸ்ரீ:** அவர் நலமடைய கடவுளிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

## இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முடியாது

**கேள்வி கேட்பவர்:** இறந்துவிட்ட ஒரு நபர் தற்போது எங்கிருக்கிறார் என்பதை நான் அறிய விரும்பினால், அதை நான் எப்படி கண்டுபிடிப்பது?

**தாதாஸ்ரீ:** குறிப்பிட்ட ஞானம் இல்லாமல் அதை அறிய முடியாது, முடியுமா என்ன! அதற்கு ஒரு குறிப்பிட்ட ஞானம் தேவை. மேலும் அதைத் தெரிந்து கொள்வதில் எந்தப் பயனும் இல்லை. ஆனால், நீங்கள் அவருக்காக பிரார்த்தனை செய்தால், அந்த பிரார்த்தனை நிச்சயமாக அவரைச் சென்றடையும். நீங்கள் அவரை நினைவுகூர்ந்தாலும், அவருக்காக பிரார்த்தனை செய்தாலும், அது அவரை சென்றடையும். (அந்த சிறப்பு மிக்க) ஞானம் இல்லாமல், நீங்கள் எதையும் கண்டுபிடிக்க முடியாது!

மரணத்திற்குப்பின் ஒருவர் எங்கே இருக்கிறார் என்பதை நீங்கள் அறிய விரும்புகிறீர்களா? உங்கள் உறவினர்களில் யாரையாவது நீங்கள் இழந்துவிட்டீர்களா?

**கேள்வி கேட்பவர்:** எனது சொந்த சகோதரர் சமீபத்தில் காலமானார்.

**தாதாஸ்ரீ:** அவர் உங்களை நினைவில் கொள்ளவில்லை. இருந்தும், நீங்கள் அவரை நினைவில் வைத்திருக்கிறீர்களா? காலமாகிவிட்டார் என்றால் என்னவென்று தெரியுமா? அதற்கு, கர்ம பதிவேடு முடிவுக்கு வந்துவிட்டது என்று அர்த்தம். நீங்கள் அந்த நபரை நினைத்துக் கொண்டே இருந்தால், என்ன செய்ய வேண்டும்? நீங்கள் *விதராக்* (முற்றிலும் உலக வாழ்கையிலிருந்து விடுபட்ட) பகவானிடம், அவருக்கு அமைதியை வழங்குமாறு பிரார்த்திக்க

வேண்டும். நீங்கள் அவரை நினைவுகூரும் போதெல்லாம், "அவருக்கு அமைதியைக் கொடுங்கள்" என்று பிரார்த்திக்க வேண்டும். உங்களால் வேறு என்ன செய்ய முடியும்?

## பாதுகாக்கப்பட வேண்டிய கடவுளின் பொக்கிஷம்

நீங்கள் என்ன வேண்டுமானாலும் கேளுங்கள். கடவுளை அடைவதில் (ஆத்மநிலையை அடைவதில்) நீங்கள் எதிர்கொள்ளும் சிரமங்களைப் பற்றி 'எங்களிடம்' கேளுங்கள், 'நாங்கள்' உங்களுக்காக அவற்றை நீக்குவோம்.

**கேள்வி கேட்பவர்:** என் மகன் விபத்தில் இறந்துவிட்டான். அந்த விபத்திற்கான காரணம் என்ன?

**தாதாஸ்ரீ:** இவ்வுலகில், கண்களால் பார்ப்பவை, காதுகளால் கேட்பவை அனைத்தும் தற்சார்பாக சரியானது, அது முற்றிலும் உண்மையல்ல! இந்த உடல் கூட உங்களுடையது அல்ல. பிறகு எப்படி அந்த மகன் உங்களுடையதாவான்? உலக தொடர்புகளில், உலக உறவுகளில், அவன் உங்கள் மகனாகக் கருதப்படுகிறான், உண்மையில் அவன் உங்கள் மகன் அல்ல. உண்மையில், இந்த உடல் கூட உங்களுடையது அல்ல. எனவே, உங்களிடம் இருப்பது மட்டுமே உங்களுடையதாகக் கருதப்படுகிறது, மற்றவை அனைத்தும் உங்களுடையது அல்ல! எனவே, உங்கள் மகன் உங்களுடையதாக நீங்கள் நம்பினால், அது பிரச்சனைகளை உருவாக்கி உணர்ச்சிவசத்தை உண்டாக்கும்! அந்த மகன் இப்போது போய்விட்டான். அது கடவுளின் விருப்பம். எனவே, நீங்கள் இப்போது அதை விட்டுவிட வேண்டும்.

**கேள்வி கேட்பவர்:** அது உண்மைதான், கடவுளுக்குச்

சொந்தமான பொருள், பாதுகாத்து வைப்பதற்காக என்னிடம் கொடுக்கப்பட்டது. அது இப்போது திரும்பப் பெறப்பட்டது!

**தாதாஸ்ரீ:** ஆமாம், அதுதான் உண்மை. இந்த தோட்டம் (உலகம்) முழுவதும் கடவுளுக்கு சொந்தமானது.

**கேள்வி கேட்பவர்:** எங்களது தீய கர்மாவினால் தான், அவர் இப்படி இறந்தாரா?

**தாதாஸ்ரீ:** ஆம், இது உங்களுடைய மகனின் தீய கர்மா மற்றும் உங்களுடைய தீய கர்மா. நல்ல கர்மா நல்ல பலன்களைத் தரும்.

## உள்நோக்கத்தின் அதிர்வலைகள் மட்டுமே சென்றடைகிறது

உங்கள் பிள்ளைகள் இறந்த பிறகு, அவர்களைப் பற்றி கவலைப்படுவது அவர்களை துன்பப்படுத்தும். ஆத்ம சொரூபத்தைப் பற்றிய அறியாமை நிலையில் இருப்பதால் நம் மக்கள் இப்படிச் செய்கிறார்கள். ஆகையால் உண்மை எதுவோ அதை நீங்கள் அறிந்து அமைதியாக இருக்க வேண்டும். தேவையில்லாமல் கவலைப்பட்டு என்ன பயன்? எல்லா இடங்களிலும் இதே போன்றுதான், குழந்தைகள் மரணிக்காத வீடுகள் இல்லை! இவை அனைத்தும் உலகியல் வாழ்க்கையின் கர்ம முடிச்சுகள் மட்டுமே; இவை கொடுக்கல் வாங்கல் தொடர்புடைய கர்மக் கணக்குகள் ஆகும். 'எனக்கும்' ஒரு மகன் மற்றும் ஒரு மகள் இருந்தனர். ஆனால், அவர்கள் இருவரும் இறந்துவிட்டனர். இந்த உலகிற்கு வந்த 'விருந்தாளிகள்' திரும்பச் சென்றுவிட்டார்கள். அவர்கள் 'நமக்கு' சொந்தமானவர்கள் அல்ல, அப்படித்தானே? நாமும் ஒரு

நாள் செல்ல வேண்டும், இல்லையா? நாமும் ஒரு நாள் மரணிக்க வேண்டியிருக்கும். அதனால், ஏன் அதை நினைத்து வருத்தப்பட வேண்டும்? எனவே, வாழ்ந்து கொண்டு இருப்பவர்களிடம் அமைதியையும் மகிழ்ச்சியையும் பகிர்ந்து வாழுங்கள். உலகை விட்டு பிரிந்தவர்கள் பிரிந்து சென்றுவிட்டார்கள், அவர்களை நினைவில் கொள்வதைக் கூட நிறுத்தி விடுங்கள். நம்மைச் சார்ந்திருப்பவர்களுக்கு அமைதியையும் மகிழ்ச்சியையும் தருவதே நமது கடமை. வாழந்துக் கொண்டிருப்பவர்களுக்கு நிம்மதியைக் அளிப்பதற்குப் பதிலாக பிரிந்து சென்றவர்களை நினைவுகூர்வதில் அர்த்தமிருக்கிறதா? எனவே, அவர்களை நினைத்து, நீங்கள் உங்கள் கடமைகளை விட்டுவிடுகிறீர்கள். நீங்கள் அப்படி உணருகிறீர்களா? போனவர்கள் போய்விட்டார்கள். உங்கள் பாக்கெட்டில் இருந்து ஒரு லட்சம் ரூபாய் தவறி விழுந்து, உங்களால் அதைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்றால், நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் தலையை சுவரில் முட்டிக்கொள்வீர்களா?

இது உங்கள் கட்டுப்பாட்டில் இல்லை. மேலும் அந்த இறந்து போன அப்பாவி மனிதருக்கு அங்கு துக்கமாக இருக்கும். உங்கள் துக்கத்தின் விளைவு அங்கு அவரை சென்றடைகிறது. எனவே, நீங்கள் அவரை மகிழ்ச்சியாக இருக்கவும் விடுவதில்லை, நீங்களும் மகிழ்ச்சியாக இருப்பவில்லை. அதனால்தான் வேதத்தை இயற்றியவர்கள், “அவர்கள் உலகைப் பிரிந்தவுடன் துக்கப்பட வேண்டாம்” என்று கூறியுள்ளனர். எனவேதான், நம் மக்கள் கருட புராணத்தை (இந்து மதத்தின் 18 பண்டைய நூல்களில் ஒன்று) ஓதவும், மற்ற வேதங்களை ஓதவும், ஏற்பாடு செய்தனர். அவர்கள் இறந்தவர்களை மறக்கும் பொருட்டு இத்தகைய சடங்கு வழிபாடுகள் (பூஜைகள்) செய்வதை ஊக்குவிக்கின்றனர். இப்படி

ஏதாவது நீங்கள் செய்ததுண்டா? அப்படி செய்தும், நீங்கள் அவரை மறந்துவிட்டீர்கள் அல்லவா?

**கேள்வி கேட்பவர்:** ஆனால், என்னால் அவனை மறக்க முடியவில்லை. எங்களுக்கு இடையே சுமூகமான தந்தை-மகன் உறவு இருந்ததால், அவனை என்னால் மறக்க முடியவில்லை.

**தாதாஸ்ரீ:** ஆம், உங்களால் அவனை மறக்க முடியாது. ஆனால், நீங்கள் அவனை மறக்கவில்லையென்றால், நீங்கள் துன்பப்படுவீர்கள். அவன் எங்கிருந்தாலும் துன்பப்படுவான். ஒரு தந்தையாக, நீங்கள் இப்படியே அவன் மீது ஆழ்மனதில் துன்பப்பட்டுக் கொண்டிருந்தால், அது எந்த நன்மையும் தராது.

**கேள்வி கேட்பவர்:** அது அவனை எப்படி துன்பப்படுத்துகிறது?

**தாதாஸ்ரீ:** இங்கே நீங்கள் அவரை நினைத்து வருத்தப்பட்டால், அதன் விளைவு அவரை அடையாமல் இருக்காது. உலகில் உள்ள அனைத்தும் ஒரு தொலைபேசி போன்றது. இந்த உலகம் ஒரு தொலைக்காட்சி (சிக்னல்) போன்றது! நீங்கள் இங்கே அவரைப் எண்ணி வருத்தப்பட்டால், அவர் திரும்பி இங்கே வர வாய்ப்பிருக்கிறதா?

**கேள்வி கேட்பவர்:** இல்லை.

**தாதாஸ்ரீ:** அவன் திரும்பி வர ஏதாவது வழி இருக்கிறதா?

**கேள்வி கேட்பவர்:** இல்லை.

**தாதாஸ்ரீ:** நீங்கள் வருத்தப்படும்போது, அது அவனைச் சென்றடைகிறது. அதேபோன்று, அவனுடைய பெயரில் நீங்கள் பக்தி வழிபாட்டில் ஈடுபடும்போது, நம் எண்ணம் அவனைச்

சென்றடைகிறது. அவன் நிம்மதியை உணர்கிறான். அவனை நிம்மதியாக வைத்திருப்பது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அவனுக்கு நிம்மதியை அளிப்பது உங்கள் கடமையில்லையா? எனவே, அவன் நன்றாக இருக்க ஏதாவது செய்யுங்கள். பள்ளிக்கூட குழந்தைகளுக்கு இனிப்புகளை வழங்கலாம்; நீங்கள் அப்படி ஏதாவது செய்யலாம்.

எனவே, உங்கள் மகனை நீங்கள் நினைவுகூரும் போதெல்லாம், அவனுடைய ஆத்மா முக்தி அடைவதற்காக பிரார்த்தனை செய்யுங்கள். பிரார்த்தனை செய்யும்போது சாட்சியாக கிருபாலுதேவ் [1867-1901க்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த ஆத்ம ஞானம் அடைந்த *ஞானி புருஷர்.* அவர் ஸ்ரீமத் ராஜ்சந்திரா என்றும் அழைக்கப்படுகிறார்] அவர்களை நினைவு கூர்ந்தாலும் சரி, அல்லது தாதா பகவானை நினைவு கூர்ந்தாலும் சரி, உங்கள் பணி நிறைவேறும். ஏனென்றால், தாதா பகவான் மற்றும் கிருபாலுதேவ் அவர்கள் இருவரும் ஆத்ம சொரூபமாக ஒன்று தான்! அவர்கள் உடலால் வேறுபட்டவர்களாக தோன்றினாலும், கண்களுக்கு வெவ்வேறு நபர்களாக தெரிந்தாலும், ஆத்ம நிலையை பொறுத்து அவர்கள் இருவரும் ஒருவர் தான். ஆகவே, நீங்கள் மகாவீர் பகவான் பெயரை நினைவு கூர்ந்தாலும், அதுவும் ஒன்றுதான். நீங்கள் வெறுமனே, உங்களுடைய மகனின் ஆத்மா முக்தி அடைவதற்கான நோக்கத்தை மட்டும் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நீங்கள் அவனுடன் வாழ்ந்தீர்கள். அவனுடன் உணவு உட்கொண்டீர்கள். எனவே, அவன் முக்தி அடைய வேண்டும் என்ற எண்ணத்தை நீங்கள் உருவாக்கிக் கொள்ள வேண்டும். நாங்கள் மற்றவர்களுக்காக நல்ல எண்ணங்களை வளர்த்துக் கொண்டுள்ளோம். அதுபோன்று,

உங்களுக்கு மிகவும் நெருக்கமாக இருப்பவர்களுக்கு நீங்கள் ஏன் அதைச் செய்ய கூடாது?

## ஒருவர் தனக்காக அழுகிறாரா அல்லது இறந்த நபருக்காக அழுகிறாரா?

**கேள்வி கேட்பவர்:** நம் மக்களுக்கு மறுஜென்மம் பற்றிய புரிதல் இருக்கிறது. பிறகு ஏன் குடும்ப உறுப்பினர் ஒருவர் இறந்தால், அவர்களுக்காக அழுகிறார்கள்?

**தாதாஸ்ரீ:** அவர்கள் தங்கள் சுயநலத்திற்காகவே அழுகிறார்கள். இறந்தவருக்கு நெருங்கிய உறவினர்கள் உண்மையாகவே அழுகிறார்கள். ஆனால், மற்றவர்கள் ஏற்கனவே இறந்துபோன தங்களுடைய உறவினர்களை நினைத்து அழுகிறார்கள். இது ஒரு அதிசயமல்லவா! இந்த மக்கள் கடந்த காலத்தை நிகழ்காலத்திற்கு கொண்டு வருகிறார்கள். இந்த இந்திய மக்கள் விசித்திரமானவர்கள்! அவர்கள் கடந்த காலத்தை நிகழ்காலத்திற்குள் கொண்டு வந்து, நமக்காக ஒரு செயற்கையான நடிப்பை வெளிப்படுத்துகிறார்கள்!

## புலம்பியதன் விளைவு...

ஒருவர் ஒரு முறை (இறப்பை எண்ணி) புலம்பினால், காலச் சக்கரத்தின் ஒரு முழுமையான சுழற்சி முடியும் வரை அவர் அலைய வேண்டியிருக்கும். ஒரு முழுமையான சுழற்சி முடியும் வரை ஒருவர் அலைய வேண்டியிருக்கும்!

## இந்த கசிவு ஏற்படக்கூடாது

**கேள்வி கேட்பவர்:** நரசிங் மேத்தா (குஜராத்தி கவிஞரும் கிருஷ்ண பக்திக்கு பெயர்போன புனிதர்) தன் மனைவி

காலமானபோது, “நல்லது, தொல்லைகள் முடிந்துவிட்டன” என்றார். இதற்கு அர்த்தம் என்ன?

**தாதாஸ்ரீ:** ஆனால், அவர் பைத்தியக்காரத்தனமாக, ‘நல்லது, தொல்லைகள் முடிந்துவிட்டன’ என்று கூறினார். ‘தொல்லைகள் முடிந்துவிட்டன’ என்ற இந்த விஷயம் மனதிலேயே வைத்துக் கொள்ளப்பட வேண்டும். மனதிலிருந்து ‘கசிந்து’ விடக்கூடாது. இருப்பினும், இது மனதில் இருந்து கசிந்து வெளிப்படுத்தப்பட்டது. மனதில் வைக்க வேண்டிய விஷயங்களை வெளிப்படுத்துபவர்கள் பைத்தியக்காரர்களாகக் கருதப்படுகிறார்கள்.

## ஒரு ஞானிக்கு விவேகம் அதிகம்

மேலும், ஞானிகள் (ஆத்ம ஞானம் கொண்டவர்கள்) பைத்தியக்காரர்கள் அல்ல. ஞானிகள் மிகவும் விவேகமானவர்கள். மனதளவில், ‘நல்லது, தொல்லைகள் முடிந்துவிட்டன’ என்று அவர்கள் நினைக்கலாம். ஆனால், அவர்கள் உரக்க என்ன சொல்கிறார்கள்? “அய்யோ!ஒரு பயங்கரமான நிகழ்வு நடந்துவிட்டதே. இப்போது நான் தனியாக என்ன செய்வேன்?” என்று சொல்வார்கள். அவர்கள் உலக வாழ்க்கை என்ற நாடகத்தில் தங்கள் பங்கை ஆற்றுகிறார்கள்! இந்த உலகமே ஒரு நாடகம் தானே. ஆகையால், ‘நல்லது, தொல்லைகள் முடிந்துவிட்டன’ என்று மனதளவில் புரிந்துகொள்ள வேண்டும்; இருப்பினும், இந்த நிலையிலும் அவர்கள் விவேகத்தை கடைபிடிக்க வேண்டும். “நல்லது, தொல்லைகள் முடிந்துவிட்டன. நான் இப்போது மகிழ்ச்சியுடன் பகவான் கிருஷ்ணரை வழிபடுவேன்” என்று ஒருவர் கூறியிருக்கக்கூடாது. குடும்ப உறுப்பினர் அல்லாதவர் கூட இத்தகைய விவேகமின்மையைக் காட்டமாட்டார். ஒரு எதிரி கூட இந்த நேரத்தில் விவேகத்தைக்

காட்டுவார், அவர் முகத்தை சோகமாக வைத்துக்கொண்டு தன் துக்கத்தை வெளிப்படுத்துவார்! ‘நாங்கள்’ புலம்பவோ அல்லது அதுபோன்று எந்த காரியத்திலும் ஈடுபடமாட்டோம். ஆனால், ‘நாங்கள்’ குளியலறைக்குச் சென்று கண்களைச் சுற்றி சிறிது தண்ணீரை தெளித்துக் கொண்டு, அமைதியாக இறுதிச் சடங்கில் கலந்து கொள்வோம். இதை தான் பாத்திரத்திற்கு ஏற்ற நடிப்பு எனப்படுகிறது. இந்த உலகம் ஒரு நாடகமே. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் நாடகத்தின் பாத்திரத்தில் நடிக்க வேண்டும். நீங்கள் நடிக்க மட்டும்தான் வேண்டும். ஆனால், கதாப்பாத்திரத்தை நேர்மையாக நிறைவேற்ற வேண்டும்.

## உடலைப் பிரிந்த ஆத்மா பதின்மூன்று நாட்கள் அலைகிறதா?

**கேள்வி கேட்பவர்:** இறந்த பிறகு, பதின்மூன்று நாட்களுக்கு ஓய்வு வீட்டில் (ஆத்மா தங்கியிருக்கும் இடம்) ஆத்மா இருப்பதாக கூறப்படுகிறதே?

**தாதாஸ்ரீ:** பிராமணர்கள் தான் (பாரம்பரியமாக அர்ச்சகர்கள் மற்றும் பண்டிதர்களாக இருக்கும் இந்து சாதி அமைப்பில் உயர்ந்த சமூகப் பதவி வகிப்பவர்கள்) இந்த பதின்மூன்று நாட்கள் கருத்தை வகுத்தனர். இறந்தவர்களுக்கும், இதற்கும் என்ன சம்பந்தம்? பிராமணர்கள் ஓய்வு வீடு இருப்பதாகச் சொல்கிறார்கள். ஆத்மா வீட்டின் கூரையில், ஒரு கட்டைவிரல் அளவில் உட்கார்ந்து, எல்லாவற்றையும் கவனிக்கிறது என்கிறார்கள். ஏய் மனிதனே, அந்த ஆத்மா ஏன் எல்லாவற்றையும் கவனிக்க வேண்டும்? ஆனால், இதிலிருக்கும் குழப்பத்தைப் பாருங்கள்! “ஆத்மா ஒரு கட்டைவிரலின் அளவுதான் இருக்கும். அது வீட்டின்

கூரையில் அமர்ந்திருக்கும்” என்று அவர்கள் கூறுகிறார்கள். நம் மக்கள் இதையும் நம்புகிறார்கள். அவர்கள் நம்பவில்லையென்றால், *சரவணி* (ஒருவர் இறந்த பதின்மூன்றாவது நாளில் ஒரு பிராமணருக்கு படுக்கை, கட்டில் மற்றும் பலவற்றைக் கொடுக்கும் சடங்கு) சடங்கை அவர்கள் மேற்கொள்ள மாட்டார்கள். *சரவணி* அல்லது இதர சடங்குகளையோ அவர்கள் செய்ய மாட்டார்கள்.

**கேள்வி கேட்பவர்:** கருட புராணத்தில் ஆத்மா ஒரு கட்டைவிரல் அளவில் மட்டுமே இருக்கும் என்று எழுதப்பட்டுள்ளது.

**தாதாஸ்ரீ:** ஆம். அதனால்தான் அது கருட புராணம் என்று அழைக்கப்படுகிறது! அதாவது, புராணம் (பழமையானது) என்று கருதப்படுகிறது. “ஆத்மா ஒரு கட்டைவிரல் அளவில் இருக்கும்” என்று அது குறிப்பிடுகிறது. எனவே, இதை நம்புபவர்கள் அந்த ஆத்ம நிலையை அடைவதுமில்லை, மற்றும் எதையும் சாதிப்பதுமில்லை. அவர்கள் எதிலும் முன்னேறுவதுமில்லை. அவர்களுக்கு எதுவுமே புரிவதில்லை. ஒவ்வொரு நாளும் அவர்களுக்கு வெள்ளிக்கிழமை தான்! அறிவியல் பூர்வமாக தான் அவர்கள் செய்தார்கள், நோக்கமும் அறிவியல் பூர்வமாக தான் இருந்தது, ஆனால் அவர்களின் சிந்தனை தவறாகிவிட்டது. அதன் காரணமாகவே மக்கள் இந்த சடங்குகளை மேற்கொள்கிறார்கள். அவர்கள் சடங்குகளைச் செய்வதற்கு முன், ஒரு பிராமணருக்கு தானம் வழங்குவார்கள். மேலும், பிராமணர்கள் தானம் பெறத் தகுதியானவர்களாக இருந்தார்கள். பிராமணர்களுக்கு மக்கள் தானம் கொடுக்கும்போது, அவர்கள் புண்ணிய கர்மாவை பிணைக்கின்றனர். அதேசமயம், இன்று எல்லாமே கேலிக் கூத்தாகிவிட்டது. பிராமணர்கள் படுக்கையை எடுத்துக்கொள்ளும்

முன்பே, அதை ஒரு குறிப்பிட்ட தொகைக்கு விற்க ஒப்பந்தம் செய்து விடுகின்றனர். மெத்தைகளை விற்க ஒப்பந்தம் செய்து விடுகின்றனர். போர்வைகளை விற்க ஒப்பந்தம் செய்து விடுகின்றனர். மேலும் நீங்கள் அவர்களுக்குக் கொடுக்கும் கருவிகள், உடைகள் உள்ளிட்ட அனைத்தையும் அவர்கள் விற்றுவிடுவார்கள். இவை இறந்த ஆத்மாவை சென்றடையும் என்று எவ்வாறு மக்கள் எண்ணுகிறார்கள்?

**கேள்வி கேட்பவர்:** தாதா, இப்போதெல்லாம் பலர் பிராமணர்களிடம் இதையெல்லாம் வாங்கச் சொல்லி, அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை முன்கூட்டியே கொடுத்து விடுகிறார்கள்.

**தாதாஸ்ரீ:** இது இப்போது மட்டுமல்ல; அவர்கள் பல ஆண்டுகளாக இதைச் செய்து வருகின்றனர். (அவர்கள் பிராமணரிடம்) “இதையெல்லாம் நீங்கள் வாங்குங்கள், இதை வாங்குவதற்கு நாங்கள் உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை தருகிறோம்” என்று கூறுகிறார்கள். அப்போது, வேறொருவர் கொடுத்த படுக்கையை அவர் கொண்டு வருகிறார்! இப்படி செய்கிறார்கள்! ஆனாலும், மக்கள் இதை உணருவதில்லை. அவர்கள் இன்னும் இந்த நடைமுறைகளைத் தொடரந்து செய்து கொண்டிருக்கிறார்கள். சமணர்கள் இத்தகைய சடங்குகளை மேற்கொள்வதில்லை. சமணர்கள் புத்திசாலிகள்; அவர்கள் இதுபோன்ற செயல்களை செய்வதில்லை. மேலும் அவர்களிடத்தில் இதுபோன்ற செயல்களே இல்லை. ஆத்மா இங்கிருந்து வெளியேறியவுடன், அதற்குரிய வாழ்க்கை கதிக்குச் செல்கிறது. அதாவது, கருப்பையில் தனது இடத்தைப் பெற்றுவிடுகிறது.

# இறந்த நபருக்கு சடங்குகளுடன் எந்த தொடர்பும் இல்லை

**கேள்வி கேட்பவர்:** ஒருவர் இறந்த பிறகு பக்திப் பாடல்களைப் பாடலாமா, கூடாதா? அப்படிச் செய்வதால் என்ன பலன்?

**தாதாஸ்ரீ:** இறந்த நபருக்கும் இதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

**கேள்வி கேட்பவர்:** அப்படியானால் ஒருவரின் மரணத்தின் போது மேற்கொள்ளப்படும் அனைத்து மத சடங்குகளும் சரியானதா இல்லையா?

**தாதாஸ்ரீ:** அவற்றில் துளியும் உண்மை இல்லை. உலகை விட்டு போனவர்கள் போய்விட்டார்கள். மக்கள் தங்கள் விருப்பப்படி இதைச் செய்கிறார்கள். மேலும் அவர்களிடம், "உங்கள் சொந்த முன்னேற்றத்திற்காக ஏதாவது செய்யுங்கள்!" என்று கூறப்பட்டால், அதற்கு அவர்கள், "இல்லை, அவ்வாறு செய்ய எனக்கு நேரமில்லை" என்று பதிலளிக்கின்றனர். மேலும் இவர்களுடைய தந்தைக்கு ஏதாவது செய்யும்படி சொன்னால் கூட அதை இவர்கள் செய்யமாட்டார்கள். இருப்பினும், அவர்களுடைய அண்டை வீட்டார், "ஏய் மனிதனே, உன் தந்தைக்கு ஏதாவது செய்" என்று அவர்களைத் வற்புறுத்துகின்றனர். ஆகையால் பக்கத்து வீட்டுக்காரர்கள் தான் அவர்களை வலுக்கட்டாயமாக செய்ய வைக்கிறார்கள்!

**கேள்வி கேட்பவர்:** அப்படியானால் கருட புராணத்தின் முக்கியத்துவம் என்ன?

**தாதாஸ்ரீ:** கருட புராணத்தைப் படிப்பது துக்கத்தில் இருக்கும் மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் ஒரு வழியாகும்.

## பாராட்டுகளைப் பெறுவதற்காகவே இவை செய்யப்படுகிறது

**கேள்வி கேட்பவர்:** ஒருவர் இறந்த பிறகு பன்னிரண்டாம் நாள் அல்லது பதிமூன்றாம் நாளில் செய்யப்படும் சடங்குகளான பாத்திரங்கள் விநியோகம் செய்வது, மக்களுக்கு விருந்து வைப்பது போன்றவை எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவை?

**தாதாஸ்ரீ:** இது கட்டாயமில்லை. மக்கள் வெறுமனே பாராட்டைப் பெறுவதற்காக இதைச் செய்கிறார்கள். மேலும் இவ்வாறு பணத்தை செலவழிக்காவிட்டால், அவர்கள் பேராசை கொண்டவர்களாக மாறிவிடுவார்கள். ஒருவரிடம் இரண்டாயிரம் ரூபாய் இருந்து, அவர் அதை மக்களுக்கு விருந்து வைப்பதற்குச் செலவு செய்யாமல் இருந்தால், அவர் பணத்தை சேகரித்துக் கொண்டே இருப்பார். இந்த வழியில் அவர் பணத்தைச் செலவழித்தால், அவருடைய மனம் தூய்மையடைந்து, அவரது பேராசை அதிகரிக்காது. ஆனால், இது கட்டாயமான ஒன்றல்ல. ஒருவர் தன்னால் முடிந்தால் மட்டுமே இதைச் செய்ய வேண்டும். அவரால் செய்ய முடியாவிட்டால் எந்த பிரச்சனையும் இல்லை.

## *ஷ்ராத்* (சிராத்தம்) குறித்த உண்மையான புரிதல்

**கேள்வி கேட்பவர்:** ஒருவரது மூதாதையர்களை சிராத்த சடங்கில் (ஒருவர் தனது முன்னோர்களுக்கு மரியாதை செலுத்தும் இந்து மதச் சடங்கு) வரவழைப்பது சரியா? சிராத்த பக்ஷத்தின் போது (முன்னோர்களை நினைவுகூரும் இந்து மஹாளைய

அமாவாசை நாள்) முன்னோர்கள் வருவார்களா? மேலும் காக்கைகளுக்கு உணவு படைப்பதன் காரணம் என்ன?

**தாதாஸ்ரீ:** அவருக்கு மகனுடன் உறவு இருந்தால், அவர் வருவார். அவருக்குரிய உறவுகள் அனைத்தும் முடிவுக்கு வரும் போது தான், அவர் அந்த உடலை விட்டு வெளியேறுகிறார். குடும்ப உறுப்பினர்கள் உடன் எந்தவித உறவும் இல்லாதபோது தான், அவர் அந்த உடலை விட்டு வெளியேறுகிறார். அதன்பின் அவர் யாருடனும் தொடர்புகொள்ள மாட்டார். இருப்பினும், ஒரு புதிய உறவு பிணைக்கப்பட்டிருந்தால், அவர் மீண்டும் அங்கேயே மறுபிறவி எடுப்பார். மற்றபடி, யாரும் திரும்பி வரமாட்டார்கள். நாம் யாரை மூதாதையராகக் கருத வேண்டும்? மகனையா அல்லது தந்தையையா? மகன் மூதாதையராகப் போகிறார், தந்தையும் ஒரு மூதாதையராகப் போகிறார், தாத்தாவும் ஒரு மூதாதையராகப் போகிறார். அப்படியானால் யாரை மூதாதையர் என்று குறிப்பிடுவது?

**கேள்வி கேட்பவர்:** இந்த சடங்குகள் வெறுமனே (இறந்தவர்களை) நினைவுகூர்வதற்காக மேற்கொள்ளப்படுகின்றன, இல்லையா?

**தாதாஸ்ரீ:** இல்லை. அது அவர்களை நினைவுபடுத்தும் நோக்கத்திற்காகவும் செய்யபடுவதில்லை. ஏனென்றால், நம் மக்கள் நான்கு அணா (ஒரு ரூபாயில் 1/16க்கு சமமான முன்னாள் இந்திய நாணய அலகு) கூட நன்கொடையாக பிறருக்கு கொடுக்காததால், “உங்கள் தந்தை இறந்துவிட்டார். எனவே, கொஞ்சம் பணம் செலவழித்து, இதைச் செய்யுங்கள், அதைச் செய்யுங்கள், அது உங்கள் தந்தையை சென்றடையும்” என்று அவர்களுக்கு அறிவுறுத்தப்படுகிறது. தந்தையை இழந்த மகனைச்

சுற்றியுள்ளவர்கள் அவனிடம், “உன் தந்தையின் பெயரில் ஏதாவது செய்! சிராத்தம் செய்! ஏதாவது நல்லது செய்!” என்று கூறுகிறார்கள். இப்படி செய்யும் இருநூறு முதல் நானூறு ரூபாய் வரையிலான நன்கொடையால் அவருக்கு பலன் கிடைக்கிறது. அவர் அதை தனது தந்தையின் பெயரில் செய்கிறார். அதன் பலனை அவர் பெறுகிறார். ஒருவரை தந்தையின் பெயரில் செய்யச் சொல்லவில்லை என்றால், இந்த மக்கள் நான்கு அணாக்கள் கூட செலவு செய்யமாட்டார்கள். எனவே, இவை அனைத்தும் மூட நம்பிக்கையினால் தொடர்கின்றன. இதை நீங்கள் புரிந்து கொண்டீர்களா? இல்லை, உங்களுக்கு புரியவில்லையா?

மக்கள் விரதம் இருப்பது, ஆயுர்வேத மருத்துவத்தின்படி ஆரோக்கிய நலன்களுக்காகவே அவர்கள் அதைச் செய்கிறார்கள். ஆயுர்வேதத்தால் ஊக்குவிக்கப்பட்ட நன்மைகளுக்காக விரதம் வைக்கும் சடங்கு நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது. அப்போது இருந்த மக்கள் இதற்காக சிறந்த முறையில் ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். முட்டாள்கள் கூட இதனால் பயனடைவார்கள். அதனால்தான் மாதத்தின் எட்டாம் நாள், பதினொன்றாம் நாள், ஐந்தாம் நாள், எனப் பல்வேறு நாட்கள் விரதம் வைப்பதற்காக வகுக்கப்பட்டுள்ளன. மேலும், அவர்கள் சிராத்த சடங்கையும் செய்கிறார்கள்! எனவே, சிராத்த சடங்கு ஒரு நல்ல காரணத்தை அடிப்படையாகக் கொண்டு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

**கேள்வி கேட்பவர்:** தாதா, உணவு படையல் படைப்பதன் நோக்கம் என்ன? அது அறியாமையாகக் கருதப்படுகிறதா?

**தாதாஸ்ரீ:** இல்லை, அது அறியாமை இல்லை. இது மக்களால் கற்பிக்கப்பட்டது. எனவே, அவர்கள் அதன் அடிப்படையில் சிராத்தம்

எனும் சடங்கை செய்கிறார்கள். சிராத்தம் எனும் சடங்கை செய்வதற்குப் பின்னால் பெரிய வரலாறு இருக்கிறது. அதைச் செய்வதன் காரணம் என்ன? சிராத்தம் எனும் சடங்கு *பாதர்வா* மாதத்தில் (இந்து சந்திர நாட்காட்டியின் பதினொன்றாவது மாதம்) சந்திர மாதத்தின் அதாவது புரட்டாசி மாத முழு நிலவு நாளில் தொடங்கி, சந்திர மாதத்தின் அதாவது புரட்டாசி மாதத்தின் அமாவசை நாள் வரை நீடிக்கிறது. அதாவது பதினாறு நாட்கள் இந்த சடங்கு நீடிக்கிறது! இப்போது, மக்கள் ஏன் இந்த சிராத்தம் எனும் சடங்கின் பாரம்பரியத்தை ஆரம்பித்தார்கள்? இந்த மக்கள் உண்மையில் மிகவும் புத்திசாலிகள்! ஏனெனில், இந்த சிராத்த சடங்கு ஒரு அறிவியல் அணுகுமுறையாகும். இந்தியாவில் சில ஆண்டுகளுக்கு முன்பு, கிராமங்களில், ஒவ்வொரு வீட்டிலும் குறைந்தபட்சம் ஒரு நபராவது வீட்டிற்கு வெளியில் படுக்கையில் படுத்திருப்பார். ஒன்று அல்லது இரண்டு பேர் மலேரியாவால் படுக்கையில் படுத்தபடி இருப்பார்கள். எந்த மாதத்தில் என்றால் இதே *பாதர்வா* மாதத்தில் தான். எனவே, நீங்கள் கிராமங்களுக்குச் சென்றால், ஒவ்வொரு வீட்டிற்கும் வெளியேயும் ஒரு படுக்கை இருக்கும். அதன் மீது ஒருவர் போர்வையால் மூடிக்கொண்டு தூங்கிக்கொண்டிருப்பார். அவருக்கு மலேரியா காய்ச்சல் மற்றும் அது தொடர்பான அனைத்து அறிகுறிகளும் இருக்கும். *பாதர்வா* மாதத்தில் கொசுக்கள் அதிகமாக இருக்கும். எனவே, மலேரியா பரவும். மலேரியா என்பது பித்தக் காய்ச்சல் (ஆயுர்வேதத்தின்படி, பித்தம் என்பது உடலின் மூன்று திரவங்களில் ஒன்றாகும். இது உடலின் அனைத்து வளர்சிதைமாற்ற செயல்முறைகளையும் சீராக்குகிறது). இது வாயு அல்லது கபத்தினால் (ஆயுர்வேதத்தின்படி, உடலின் மூன்று திரவங்களில் இரண்டாவது மற்றும் மூன்றாவது)

ஏற்படும் காய்ச்சல் அல்ல. இது பித்த காய்ச்சல். அதனால், பித்தம் அதிக அளவில் (உடலில்) அதிகரிக்கிறது. மேலும், அப்போது மழைக்காலம், பித்தக் காய்ச்சலும் பரவி இருக்கும். அதுமட்டுமல்லாமல் கொசுக்கள் கடித்துக்கொண்டே இருக்கும். பித்தம் அதிகம் உள்ளவர்களை கொசுக்கள் கடிக்கும். எனவே, மக்கள் இதைக் கவனித்து, இந்தியாவில் இருக்கும் இந்தப் பிரச்சினைக்கு ஒரு தீர்வைக் கண்டுபிடிக்க முடிவு செய்தனர். இல்லையெனில், அது பாதி மக்களை அழித்துவிடும். தற்போது, கொசுக்கள் குறைந்துள்ளன; இல்லையெனில், மக்களால் வாழ முடியாது. எனவே, பித்தக் காய்ச்சலைக் குறைக்க, மக்கள் அரிசி பால் பாயாசம் *(கீர்)* மற்றும் பால்கோவா *(தூத்பாக்)* சாப்பிட வேண்டியிருந்தது. பால் மற்றும் சர்க்கரையை உட்கொண்டால், பித்தம் குறைகிறது என்றும், மலேரியா பிரச்சினை தீர்க்கப்படும் என்றும் அவர்கள் கண்டுபிடித்தனர். எனினும், இப்போதுள்ள மக்கள், தங்கள் வீட்டில் பால் இருந்தாலும்கூட, பாயாசம் செய்வது இல்லை, பால்கோவா சாப்பிடுவதும் இல்லை. இப்போதுள்ள மக்கள் இப்படித்தான் இருக்கிறார்கள்! அவர்கள் மிகவும் இயல்பானவர்கள், அல்லவா! அதனால் என்ன ஆகும் என்று தெரியுமா? அவர்கள் தினமும் பால்கோவா எப்படி சாப்பிடுவார்கள்?

இவை எதுவுமே இறந்த தந்தைக்குச் சென்றடையாது. இருப்பினும், இந்திய மக்கள் நன்கொடையாக நான்கு அணாக்கள் கூட தானம் செய்ய வாய்ப்பில்லை என்பதை இவர்கள் கண்டறிந்தனர். இரண்டு அணா கூட தானம் செய்யாத பேராசைக் காரர்கள். எனவே, அவர்கள் தந்தைக்கு சிராத்தம் செய்ய வேண்டிய நிர்பந்தம் ஏற்படுத்தப்பட்டது. உங்களை அப்படிச் செய்ய சொல்வதற்காக மக்கள் வருவதில்லையா! எனவே,

இப்படித்தான் மக்கள் சிராத்தம் செய்ய நிர்பந்தப்படுத்தப்பட்டனர். பிறகு மக்கள், “தந்தைக்கு சிராத்தப் படையல் கொடுக்க வேண்டும்!” என்று கூறத் தொடங்கி விட்டனர். ஒருவர் என்னைப் போல் பிடிவாதமாக இருந்து அதைச் செய்யவில்லையென்றால், மக்கள் அவரை என்ன சொல்வார்கள்? “நீங்கள் உங்கள் தந்தைக்கு சிராத்தம் கூட செய்யவில்லையா?” என்று கேட்பார்கள். எனவே, அவரைச் சுற்றியுள்ளவர்கள் தொடர்ந்து அவரை நச்சரிப்பதால், அவர் அதை நிர்பந்தமாகச் செய்கிறார். மக்களுக்கு இரவு உணவு ஏற்பாடு செய்கிறார்.

பௌர்ணமி நாளிலிருந்து ஒருவருக்கு பால்கோவா சாப்பிடக் கிடைக்கிறது, அவருக்கு மொத்தம் பதினைந்து நாட்கள் பால்கோவா சாப்பிடக் கிடைக்கிறது. ஏனென்றால், இன்று அனைவரும் என் வீட்டிற்கு அழைக்கப்பட்டு இருக்கிறார்கள், அவர்கள் நாளை உங்கள் வீட்டிற்கு அழைக்கப்படுவார்கள், மேலும் மக்கள் இதை மிகவும் பொருத்தமானதாகக் கண்டனர். “பரவாயில்லை, நாம் ஒருவர் பின் ஒருவர் அனைவருக்கும் உணவளிக்கிறோம்! இதில் எந்த மோசடியும் இல்லை, பிறகு காகங்களுக்கு பாயாசம் மற்றும் உணவு வகைகள் வைக்கப்படுகிறது.” எனவே, இந்த செயல் திட்டமிடப்பட்டது. இந்த உணவினால் பித்தம் சமநிலையாகிறது. எனவே, மக்கள் ஏற்பாடு செய்ததற்கான காரணம் இதுதான். அந்தக் காலத்து மக்கள் சொல்வது என்னவென்றால், ஒருவர் பதினாறு நாட்கள் சிராத்தத்திற்குப் பிறகு வாழ்ந்தால், அவர் நவராத்திரியில் (‘ஒன்பது இரவுகள்’ என்று பொருள்படும் வருடாந்திர இந்துக்களின் திருவிழா, இலையுதிர் காலத்தில் கொண்டாடப்படுகிறது விழா) கலந்து கொள்ளலாம் என்று!

## ஒப்புதல் இல்லாமல் மரணம் நிகழாது

இருப்பினும், இயற்கையின் நியதி, ஒரு நபரை அவருடைய ஒப்புதல் இல்லாமல் இங்கிருந்து அழைத்துச் செல்லாது. ஒரு நபர் அந்த ஒப்பந்தத்தில் கையொப்பமிடவில்லை என்றால் அவரை இங்கிருந்து இயற்கை அழைத்துச் செல்லாது. மக்கள் அத்தகைய விஷயத்தை உறுதிபடுத்துகிறார்களா? "கடவுளே, என்னை இங்கிருந்து அழைத்துச் சென்றுவிடு" என்று அவர்கள் கூறுவதில்லையா? ஏன் இவ்வாறு கூறுகிறார்கள் தெரியுமா? கடுமையான வேதனையை அனுபவிக்கும் போது, அவர்கள் வலியால், "நான் இந்த உடலை விட்டு வெளியேறினால் நன்றாக இருக்குமே" என்று கூறுகிறார்கள். அந்த நேரத்தில், அவர்கள் இதற்கு ஒப்புதல் அளிக்கிறார்கள்.

## தற்கொலைக்கு முயற்சி செய்வதற்கு முன், முதலில் 'என்னை' நினைவில் கொள்ளுங்கள்

**கேள்வி கேட்பவர்:** தாதா, ஒருவர் தற்கொலை செய்து கொண்ட பிறகு, ஏழு ஜென்மங்கள் முழுவதும் அதையே திரும்பத் திரும்ப செய்ய வேண்டியிருக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன், அது உண்மையா?

**தாதாஸ்ரீ:** இந்த விதமான கர்மப் பதிவுகள் உருவாவது, ஏழு அல்லது எட்டு ஜென்மங்களுக்கு தொடரும். ஆகையால். தவறான கர்மப் பதிவுகளை உருவாக்கிக் கொள்ளாதீர்கள். தவறான கர்மப் பதிவுகளிலிருந்து விலகி விடுங்கள். எவ்வளவு வலிகள் இருந்தாலும், அதைத் தாங்கிக் கொள்ளுங்கள், ஆனால், நீங்கள் உங்களை துப்பாக்கியால் சுட்டுக் கொள்ளாதீர்கள், தற்கொலை செய்து கொள்ளாதீர்கள். சில வருடங்களுக்கு முன், வடோதரா நகரில்

உள்ள அனைவரிடமும், தற்கொலை செய்து கொள்ள நினைத்தால், என்னை நினைத்துக் கொண்டு, என்னிடம் வாருங்கள் என்று கூறியிருந்தேன்.

இதுபோன்ற தற்கொலை போக்கை வெளிப்படுத்தும் குறிப்பிட்ட சிலரிடம் இதை நான் முன்கூட்டியே சொல்லிவிடுவேன். எனவே, அவர்கள் என்னிடம் வந்து விடுவார்கள், நான் அவர்களுக்கு சரியான புரிதலைக் கொடுப்பேன். அடுத்த தினமே, அவர்கள் தங்கள் தற்கொலை முயற்சியை கைவிட்டிருப்பார்கள். 1951-ம் ஆண்டுக்குப் பிறகு, யாரேனும் தற்கொலை செய்து கொள்ள எண்ணினால், முதலில் என்னை வந்து பார்க்க வேண்டும் என்று அனைவருக்கும் அறிவித்திருந்தேன். “நான் தற்கொலை செய்து கொள்ள விரும்புகிறேன்” என்று யாராவது கூறிக்கொண்டு வந்தால், அவருக்கு அதனால் ஏற்படும் விளைவுகளையும், முழுமையான கருத்தையும், தற்கொலை செய்துகொள்வது உரியதா, இல்லையா என்பதை பற்றிய விவரங்களையும் அவருக்கு நான் விளக்கி கூறுவேன். எல்லாவற்றையும் அவருக்கு விளக்கமாக கூறி, அவருடைய மனதை நான் மாற்றி விடுவேன்.

## தற்கொலை செய்து கொள்வதால் ஏற்படும் விளைவுகள்

**கேள்வி கேட்பவர்:** ஒருவர் தற்கொலை செய்து கொண்டால், அவர் எந்த வாழ்க்கை கதியை அடைவார்? அவர் பேயாக (பசி மற்றும் தாகத்தால் இடைவிடாது சித்திரவதை செய்யப்படும் உடலற்ற உயிரினம்) அல்லது பூதமாக மாறுகிறாரா?

**தாதாஸ்ரீ:** தற்கொலை செய்து கொள்வதன் மூலம் ஒருவர் பேயாக மாறி, பிறகு பேயாக அலைய வேண்டியிருக்கும். எனவே,

மாறாக, ஒருவர் தற்கொலை செய்துகொள்வதன் மூலம் பிரச்சனையை வரவழைத்துக்கொள்கிறார். ஒருமுறை தற்கொலை செய்வது பல ஜென்மங்களுக்கு அது எதிரொலிக்கும்! மேலும் ஒருவர் தற்கொலை செய்துகொண்டால், அது அவர் முதல் முறையாக செய்யும் செயல் அல்ல; முந்தைய ஜென்மத்தில் செய்த தற்கொலையின் எதிரொலியால் அவர் அதைச் செய்கிறார். முன்ஜென்மத்தில் செய்த தற்கொலையினால் உண்டான கர்மாவின் விளைவுதான் இந்த வாழ்க்கையில் தற்கொலை செய்துகொள்வது. எனவே, ஒருவர் தன்னைத் தானே மாய்த்துக் கொள்கிறார். அவர் தனது முன்ஜென்ம வாழ்க்கையில் அதே காரியத்தைச் செய்துவிட்டு வந்துள்ளார். அத்தகைய எதிரொலிகள் உருவாகியதால் அவர் தன்னைத் தானே மாய்த்துக் கொள்கிறார். மேலும், தற்கொலை செய்து கொண்ட பிறகு உடல் இல்லாமல் அவர் அலைய வேண்டியிருக்கும். பூதம் உடலைப் பெறுவது எளிதல்ல. பூதம் என்பது தேவகதியில் இருக்கும் ஒரு கீழ்நிலை வாழ்க்கை; அது எளிதான விஷயம் அல்ல. ஒருவர் முன் ஜென்மத்தில் கடுமையான தண்டனையை அனுபவித்து இருந்தால் தான் பூதமாக மாறுகிறார், அவர் அறியாமையால் தண்டனையை அனுபவித்து இருந்தால் பூதமாக மாறுகிறார். அதேசமயம், பேய் என்பது வேறு.

## ‘நான்’ என்ற உணர்வு இல்லாமல் ஒருவர் வாழ முடியாது

**கேள்வி கேட்பவர்:** தற்கொலை எண்ணங்கள் ஏன் எழுகிறது?

**தாதாஸ்ரீ:** இதற்கு காரணம் ஒருவருடைய *விகல்ப்* (ஒருவரின் தன்மானம்; வாழ்வதற்கான அடிப்படை) அழிக்கப்படுவதே ஆகும்.

இந்த *விகல்ப்* (நான் தான் சந்துபாய் என்ற அகநிலை புரிதல்) அடிப்படையிலேயே ஒருவர் உயிர் வாழ முடிகிறது. இந்த *விகல்ப்* (நான் தான் சந்துபாய் என்ற அகநிலை புரிதல்) அழிந்துவிட்டால், அடுத்து என்ன செய்வது என்று ஒருவரால் சிந்திக்க முடியாது, அது தற்கொலை எண்ணங்களுக்கு வழிவகுக்கிறது. எனவே, இத்தகைய *விகல்ப்* நிச்சயமாக நன்மை பயக்கும்!

இயல்பாக மற்றும் தன்னிச்சையாக எழும் எண்ணங்கள் எப்போது முடிவடைகின்றதோ, அப்போதுதான் இந்த எதிர்மறை எண்ணங்கள் அனைத்தும் எழுகின்றன. *விகல்ப்* (நான் தான் சந்துபாய் என்ற அகநிலை புரிதல்) முடிவுக்கு வந்துவிட்டால், இயல்பாக மற்றும் தன்னிச்சையாக எழும் எண்ணங்களும் முடிவடைந்து விடுகின்றன. அது முற்றிலும் இருண்டுவிடுகிறது, பிறகு ஒருவர் மேற்கொண்டு எதையும் பார்க்க முடிவதில்லை! *சங்கல்ப்* என்றால் “என்னுடையது” (இந்த உலகில் யார் மற்றும் எது என்னுடையது) மற்றும் *விகல்ப்* என்றால் “நான்” (நான் தான் சந்துபாய் என்ற அகநிலை புரிதல்; தன்மானம்) இவை இரண்டும் இல்லாத போது, இறப்பது பற்றிய எண்ணங்கள் எழுகின்றன.

## தற்கொலை செய்து கொள்வதற்கான காரணங்கள்

**கேள்வி கேட்பவர்:** ஒருவருக்கு எழும் தற்கொலை எண்ணங்களுக்கு பின்னால் உள்ள அடிப்படைக் காரணம் என்ன?

**தாதாஸ்ரீ:** தற்கொலைக்கான அடிப்படைக் காரணம், முந்தைய ஜென்மத்தில் ஒருவர் தற்கொலை செய்து கொண்டதன் எதிரொலி ஏழு ஜென்மங்களுக்கு தொடருவதாகும். உதாரணமாக, மூன்று அடி உயரத்தில் இருந்து ஒரு பந்தை வீசினால், அந்த பந்து கீழே

விழுந்ததும் தானாகவே இரண்டரை அடி உயரத்திற்கு குதிக்கும். இறுதியில், அது ஒரு அடி உயரத்திற்கு குதிக்கும்; அப்படி நிகழ்கிறதா, இல்லையா? அந்த பந்து மூன்று அடி உயரத்திற்கு குதிக்காமல், தன் இயல்புநிலை காரணமாக இரண்டரை அடி உயரத்திற்கு மட்டுமே குதிக்கிறது. மூன்றாவது முறை, அது இரண்டு அடி உயரத்திற்கு மட்டுமே குதிக்கும், நான்காவது முறை, மீண்டும் ஒன்றரை அடி உயரம் வரை மட்டும் குதிக்கும். பின்னர், இறுதியில் அது ஒரு அடி உயரத்திற்கு குதிக்கும். அதுதான் இயக்கத்தின் இயல் கொள்கையாகும். அத்தகைய இயற்கை விதிகள் உள்ளன. எனவே, ஒருவர் தற்கொலை செய்துகொண்டால், அடுத்த ஏழு ஜென்மங்களுக்குத் தவிர்க்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ள வேண்டியிருக்கும். இந்த தற்கொலையின் விளைவுகளின் தீவிரம் ஒன்றுக்கொன்று மாறுபடலாம். ஒட்டுமொத்தமாக நாம் இந்த தற்கொலையைக் காண்கிறோம். ஆனால், ஒவ்வொரு முறையும் பாதிப்புகள் குறைந்து, விளைவுகள் படிப்படியாகக் குறைந்து அவை முடிவுக்கு வருகின்றன.

## இறுதி தருணங்களில்...

மரண தருவாயின் போது, ஒருவர் அவருடைய வாழ்க்கை முழுவதும் செய்தவற்றின் இருப்புநிலைக் குறிப்பு பெறப்படுகிறது. இருப்புநிலைக் குறிப்பு தயாரிக்கப்பட்டு கடைசி நாற்பத்தைந்து நிமிடங்களில் வாசித்துக் காட்டப்படுகிறது, அதன் அடிப்படையில் அடுத்த ஜென்மத்திற்கான உடல் (உயிர் வடிவம்) தீர்மானிக்கப்படுகிறது. எனவே, இரண்டு கால் கொண்டவர்கள் நான்கு கால் கொண்டவர்களாகின்றனர் (ஒருவர் மனித கதியிலிருந்து விலங்கு கதிக்குச் செல்கிறார்). ஒருவர் ரொட்டி

சாப்பிடும் நிலையிலிருந்து செடியின் தண்டுகள் மற்றும் நாணல் (புற்கள்) சாப்பிடும் நிலைக்கு செல்கிறார். இது கலியுகத்தின் சிறப்பு (எண்ணம், பேச்சு மற்றும் செயல் ஆகியவற்றில் ஒற்றுமையின்மையால் வகைப்படுத்தப்படுகிற காலச் சுழற்சியின் தற்போதைய சகாப்தம்). ஒரு மனித கதியை மீண்டும் பெறுவது கடினம், இதுதான் இந்த கலியுகத்தின் நிலை!

**கேள்வி கேட்பவர்:** மரண தருவாயில், காதுகள் எப்போது செயல் இழந்து போகிறது என்பது யாருக்கு தெரியும்?

**தாதாஶ்ரீ:** இறுதி நேரத்தில், கணக்கு பதிவேட்டில் வரவு வைக்கப்பட்டுள்ள அனைத்தும் ஒருவருடன் வரும். இறப்பதற்கு முந்தைய இறுதி மணி நேரம், அந்த *குந்தானு* (48 நிமிட காலம்) இருப்புநிலைக் குறிப்புக்கு உரியதாகும். மேலும், அந்த இருப்புநிலைக் குறிப்பு முழு வாழ்க்கைக்குமானது அல்ல. மாறாக, அது வாழ்கையின் பிற்கால பகுதியின் இருப்புநிலை பகுதியின், அதாவது இறுதி ஆயுட்காலத்தில் மூன்றில் ஒரு பங்காகும். எனவே, இறுதி நேரத்தில், நம் மக்களில் பலர், (இறக்கும் நபரின்) காதில், “ராமரின் பெயரை சொல்லுங்கள், ராமர் என்று சொல்லுங்கள்” என்று மெல்லிய குரலில் சொல்லுவார்கள். ஹே மக்களே, அவரை ஏன் ராம நாமத்தைச் சொல்லச் சொல்கிறார்கள்? ராமர் வெகு காலத்திற்கு முன்பே சென்றுவிட்டார் (மோட்சம் அடைந்துவிட்டார்).

ஆனால் மக்கள் இவ்வாறு விஷயங்களைச் செய்வதற்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளனர். இருப்பினும், புண்ணிய கர்மா பலனளிக்கும் பட்சத்தில், ஒரு நபர் அதற்கு “அட்ஜெஸ்ட்” (ஏற்றுக் கொண்டு) செய்வார். அதே சமயம், மற்றொரு நபர் தனது மகளுக்கு திருமணம் செய்து வைக்கும் கவலையில்

மூழ்கியிருப்பார், 'எனது மூன்று மகள்களுக்கு நான் திருமணம் செய்து வைத்தேன், ஆனால், நான்காவது மகளுக்கு இன்னும் திருமணம் செய்து வைக்கவில்லை. இந்த மூன்று மகள்களுக்கும் திருமணம் செய்து வைத்து முடித்துவிட்டேன். ஆனால், இளையவளுக்கு இன்னும் திருமணம் செய்ய வேண்டியுள்ளது' என்று. அடுத்த ஜென்மத்தில் சேகரிக்கப்பட்ட இருப்பு தொடரும். மேலும், குழந்தைப் பருவத்தில் நீங்கள் செய்த நல்ல காரியங்கள் உங்களுடன் வராது. ஆனால், முதுமையில் நீங்கள் செய்த நல்ல காரியங்கள் உங்களுடன் வரும்.

## இயற்கையின் விதி மிகவும் அற்புதமானது

எனவே, உடலைப் பிரிந்த ஆத்மா இங்கிருந்து வெளியேறும்போதும் கூட, இயற்கையின் விதி மிகவும் துல்லியமாக உள்ளது அல்லவா! ஆயினும்கூட, *விதராக்* பகவான் "உனக்கு ஐம்பது வயதாகிறது, ஜாக்கிரதையாக இரு" என்று எச்சரிக்கிறார்.

ஒரு நபருக்கு எழுபத்தைந்து ஆண்டுகள் ஆயுட்காலம் இருந்தால், முதல் 'புகைப்படம்' (இருப்புநிலைக் குறிப்பு) ஐம்பது வயதில் பதிவாக்கப்படுகிறது. ஒருவரின் ஆயுட்காலம் அறுபது வருடங்கள் எனில், நாற்பது வயதில் தான் அவருக்கு முதல் இருப்புநிலைக் குறிப்பு பதிவாக்கப்படுகிறது. ஒருவருக்கு எண்பத்தொரு வருடங்கள் ஆயுட்காலம் இருந்தால், ஐம்பத்து நான்கு வயதில் 'புகைப்படம்' பதிவாக்கப்படுகிறது. ஆனால் அதுவரை, ஒருவர் அவ்வளவு நேரம் இலவசமாகப் பெறுகிறார்; ஒருவர் வாழ்க்கையின் மூன்றில் முதல் இரண்டு பங்கு அவருக்கு இலவசமாக கிடைக்கிறது. மேலும், ஒருவருடைய வாழ்க்கையின்

மூன்றில் கடைசி ஒரு பங்கில், இருப்புநிலைக் குறிப்பு பதிவாக்கப்பட்டுக்கொண்டே இருக்கிறது. இது நல்ல சட்டமா அல்லது அடக்குமுறையா? இது அடக்குமுறை இல்லை, அல்லவா? இது நியாயமானது தானே? அவர்கள் "நீங்கள் உங்கள் வாழ்க்கையின் மூன்றில் முதல் இரண்டு பங்கு காலத்தில் பொறுப்பற்றவராக இருந்தால் எங்களுக்கு எந்த பிரச்சனையும் இல்லை. ஆனால், குறைந்தபட்சம் இப்போதாவது ஒழுங்கான முறையில் நடந்து கொள்ளுங்கள்!" என்று கூறுகிறார்கள்.

## ஒவ்வொரு நொடியிலும் (நான் இந்த உடல் என்ற) தவறான புரிதலுக்கு மரணம் ஏற்படுகிறது!

**கேள்வி கேட்பவர்:** உடல்தான் இறந்து போகிறது என்று நம்மால் கூற முடியாதா?

**தாதாஸ்ரீ:** ஆத்ம நிலையை அடையாதவர்கள் இரண்டு வகையான மரணத்திற்கு உள்ளாகிறார்கள். *பாவ் மரண்* ('நான்தான் சந்துபாய்,' 'நான்தான் அதைச் செய்தேன்,' 'எனக்கு இது நடந்தது' என்ற தவறான புரிதலுடன் மரணம் அடைவது) தினமும் நடந்து கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு கணத்திலும் *பாவ் மரண்* ஏற்படுகிறது, இறுதியில் உடல் மரணம் அடைகிறது. ஆனால், ஒவ்வொரு நாளும் *பாவ் மரண்* நிகழ்கிறது. அதனால்தான் மக்கள் ஒவ்வொரு நாளும் "அழுகிறார்கள்". ஒவ்வொரு கணத்திலும் *பாவ் மரண்* ஏற்படுகிறது. அதனால்தான் கிருபாலுதேவ் அவர்கள்,

*'க்ஷன் க்ஷன் பயங்கர் பாவ் மரணே கா அஹோ ராச்சி ரஹ்யோ!'* என்று எழுதியிருக்கிறார்.

அதாவது, 'ஒவ்வொரு கணமும் *பாவ் மரன்* ஏற்பட்டுக்கொண்டு

இருக்கும்போது, நீங்கள் ஏன் இந்த உலக வாழ்வில் மூழ்கி இருக்கிறீர்கள்?'

இங்கு வாழும் மக்களெல்லாம், இறப்பதற்காக இதைச் செய்கிறார்களா, அல்லது எந்த நோக்கத்திற்காக இங்கு வாழ்கிறார்கள்?

## சமாதி மரணம்

எனவே, மரணத்தை முன்னோக்கி, 'வேண்டுமானால் சீக்கிரம் வந்திடு, விரும்பினால் தாமதாக வந்திடு. ஆனால், சமாதி மரணமாக (இறப்பின் போது ஒருவர் தன் ஆத்மாவைப் பற்றிய விழிப்புணர்வுடன் இருக்கும் பேரின்ப நிலை) என்னை வந்து அடைந்திடு!' என்று சொல்லுங்கள்.

சமாதி மரணம் என்பது ஒருவர் (இறப்பின் போது) தன் ஆத்மாவைத் தவிர வேறெதையும் நினைக்காத நிலை ஆகும். அதாவது ஒருவருடைய சித்தத்தில், (ஞானம் மற்றும் தரிசனம் உள்ளடக்கிய ஒரு நுட்பமான அங்கம்) ஒருவரின் உண்மை சொரூபமான தூய சுத்தாத்மாவைத் தவிர வேறு எதுவும் இல்லாமல் இருப்பது. மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் ஆகியவற்றின் நிலையற்ற தன்மை என்று எதிலும் கவனம் சிதறுவது இல்லை! நிலையான சமாதிநிலை (மனம், உடல் மற்றும் வெளிப்புறத்திலிருந்து தூண்டப்படும் பிரச்சனைகளின் விளைவுகளிலிருந்து விடுபட்ட ஆத்ம நிலை) ஒன்று உள்ளது! உடலுக்கு வெளிப்புறத்திலிருந்து தூண்டப்படும் பிரச்சனைகள் இருக்கலாம். ஆனால் அவற்றால் ஆத்ம நிலையை அடைந்தவர் பாதிக்கப்படுவதில்லை; உடலில் பிரச்சனைகள் அதிகமாக இருக்கிறதா, இல்லையா?

**கேள்வி கேட்பவர்:** ஆம்.

**தாதாஸ்ரீ:** உடலுக்கு வெளிப்புறத்திலிருந்து தூண்டப்படும் பிரச்சனைகளை மட்டும் கொண்டிருக்கவில்லை, உடலில் வியாதியும் இருக்கிறது, இல்லையா? வெளிப்புறத்திலிருந்து தூண்டப்படும் பிரச்சனைகள் ஒரு ஞானியை பாதிக்காது. உடல் ரீதியான பிரச்சனைகள் இருந்தால், அவைகளும் அவரைப் பாதிக்காது. அதேசமயம், ஆத்ம ஞானம் இல்லாதவருக்கு, உடல் ரீதியான பிரச்சனைகள் இல்லாவிட்டாலும், அவைகளை அவன் வரவேற்றுக்கொள்கிறார்! சமாதி மரணம் என்றால் 'நான் சுத்தாத்மா' என்ற அனுபவ விழிப்புணர்வுடன் இருப்பது! நம் மகாத்மாக்களில் மறைந்தவர்கள் அனைவருக்கும் "நான் சுத்தாத்மா" என்ற அனுபவ விழிப்புணர்வு இருந்தது.

## ஒருவர் அடையப்போகும் வாழ்க்கை கதியின் அறிகுறி

**கேள்வி கேட்பவர்:** மரணத்தின் போது, உடலைப் பிரிந்த ஆத்மா உயர்ந்த வாழ்க்கை நிலையை அடைந்திருக்கிறதா, இல்லையா என்பதை வெளிப்படுத்தும் அடையாளம் ஏதேனும் உள்ளதா?

**தாதாஸ்ரீ:** அந்த நேரத்தில், (அவர் கவலையில் மூழ்கியிருந்தால்,)'என் மகளுக்கு திருமணம் நடக்குமா இல்லையா?' இப்படிப்பட்ட எல்லா வீட்டு விஷயங்களிலும் அவர் தொடர்ந்து கவலைப்பட்டுக் கொண்டிருந்தால், அல்லது இதுபோன்ற விஷயங்களைப் பற்றி அவர் தொடர்ந்து ஆர்வமாக இருந்தால், அவர் ஒரு தாழ்ந்த வாழ்க்கை நிலையை அடைவார் என்பதை அறிந்து கொள்ளுங்கள். அதேசமயம், அவர் ஆத்ம நிலையில்

நிலைத்திருந்தால், அல்லது கடவுளுடன் நிலைத்திருந்தால், அவர் உயர்ந்த வாழ்க்கை நிலையை அடைவார்.

**கேள்வி கேட்பவர்:** ஆனால், அவர் சில நாட்கள் சுயநினைவின்றி இருந்தால் என்ன செய்வது?

**தாதாஸ்ரீ:** அவர் சுயநினைவின்றி இருந்தாலும், அவர் ஞான நிலையில் (ஆத்ம ஞானம் அடைந்தவராக) இருந்தால், அதில் எந்த பிரச்சனையும் இல்லை. அவர் இந்த ஞானத்தை பெற்றிருக்க வேண்டும். அப்போது, சுயநினைவின்றி இருந்தாலும் எந்த பிரச்னையும் இல்லை.

## மரணம் குறித்த அச்சம்

**கேள்வி கேட்பவர்:** பிறகு ஏன் எல்லோரும் மரணத்தை கண்டு அஞ்சுகிறார்கள்?

**தாதாஸ்ரீ:** நான் எனும் அஹங்காரத்திற்கு தான் மரண அச்சம் இருக்கிறது. ஆத்மாவிற்கு அப்படி எந்த அச்சம் இருப்பது இல்லை. ‘நான் இறக்கப்போகிறேன், நான் இறக்கப்போகிறேன்’ என்ற பயம் நான் எனும் அஹங்காரத்திற்கு உண்டு.

## அந்த கண்ணோட்டத்தில் பார்க்க முயற்சி செய்யுங்கள்

பகவானின் கண்ணோட்டத்தின் படி, உலகில் என்ன நடக்கிறது? அவரது கண்ணோட்டத்தின்படி, யாரும் இறப்பதில்லை. பகவானின் கண்ணோட்டத்தை நீங்கள் அடைந்தால், அவர் ஒரு நாள் அதை உங்களுக்குக் கொடுத்தால், இந்த உலகில் எத்தனை பேர் இறந்தாலும், அதனால் நீங்கள் பாதிக்கப்பட மாட்டீர்கள். ஏனென்றால், பகவானின் கண்ணோட்டத்தின்படி, யாரும் இறப்பதில்லை.

## உடல் அழிந்துவிடும், ஆத்மா அழியாதது

இன்றோ அல்லது நாளையோ, நீங்கள் இதற்கு ஒரு தீர்வைக் கொண்டு வர வேண்டும், இல்லையா? வாழ்வுக்கும், சாவுக்கும் ஒரு தீர்வைக் கொண்டுவர வேண்டாமா? உண்மையில் ஒருவர்; இறப்பதுமில்லை, வாழ்வதுமில்லை. தான் ஜீவாத்மா (நான்தான் சந்துபாய் மற்றும் நான் தான் செய்பவர்) என்ற தவறான புரிதலை கொண்டிருக்கிறார். தன்னுடைய சொரூபம் ஆத்ம சொரூபம் (பரமாத்மா சொரூபம்) என்பதை புரிந்துகொள்ளாததால், தான் ஜீவாத்மா சொரூபமாக நிலைக்கொள்கிறார்!

**கேள்வி கேட்பவர்:** அனைவருக்கும் இந்த புரிதல் வந்துவிட்டால், இந்த உலகம் நிலைக்காது, இல்லையா!

**தாதாஶ்ரீ:** ஆம், அது நிச்சயமாக நிலைக்காது! இருப்பினும், இதை அனைவரும் புரிந்து கொள்ள முடியாது என்பதே உண்மை! இதெல்லாம் ஒரு புதிர். இது மிகவும் மர்மமானது; ஒரு ஆழ்ந்த மர்மம்; இந்த ஆழ்ந்த மர்மத்தின் காரணமாகவே இந்த உண்மையற்ற உலகம் இயங்குகிறது.

## பிறப்பவர் மற்றும் இறப்பவர் யார்?

பிறப்பதும் இறப்பதும் ஆத்மா அல்ல. ஆத்மா என்பது நிரந்தரமான ஒன்று. பிறப்பும், இறப்பும் அஹங்காரத்திற்கு (தவறான புரிதல்கள்) வருவது. அஹங்காரம் பிறக்கிறது, அஹங்காரம் அழிகிறது. ஆத்மா ஒருபோதும் இறப்பதில்லை. உண்மையில், பிறப்பதும் அஹங்காரம் தான், இறப்பதும் அஹங்காரம் தான்.

# 2. ஆத்மாவின் நிலை மரணத்திற்கு முன், பின் மற்றும் நிகழும் போது

## பிறப்பு மற்றும் இறப்பு என்றால் என்ன?

**கேள்வி கேட்பவர்:** பிறப்பு மற்றும் இறப்பு என்றால் என்ன?

**தாதாஸ்ரீ:** பிறப்பு மற்றும் இறப்பு நிகழ்கிறது, அந்த நேரத்தில் என்ன நிகழ்கிறது என்பதை நாம் பார்த்துக்கொண்டு தான் இருக்கிறோம். அது கேட்கத் தகுந்த விஷயமானது அல்ல. பிறப்பு மற்றும் இறப்பு என்பதன் பொருள் ஒருவரின் கர்மக் கணக்கு முடிவுக்கு வந்துவிட்டது என்பதாகும். ஒரு ஜென்மத்திற்கான பிணைக்கப்பட்ட கர்மக் கணக்கு முடிவுக்கு வரும்போது, அந்த ஜீவனுக்கு மரணம் ஏற்படுகிறது.

## இறப்பு என்றால் என்ன?

**கேள்வி கேட்பவர்:** இறப்பு என்றால் என்ன?

**தாதாஸ்ரீ:** இறப்பு என்றால் ஒரு சட்டை தைக்கப்பட்டுள்ளது என்று வைத்துக்கொள்வோம். அது சட்டையின் பிறப்புக்கு சமம். அது பிறக்கும்போதே, அதன் இறப்பு தவிர்க்க முடியாத ஒன்றாகிவிடுகிறது! பிறக்கும் அனைத்து ஜீவராசிகளும் இறப்பிற்குட்பட்டதே. அதேசமயம், ஆத்மா ஒருபோதும் பிறக்காது *(அஜன்ம)*, இறக்கவும் செய்யாது (*அமர்*); அது ஒருபோதும் மரணத்திற்குட்படாதது. எனவே, பிறக்கும் அனைத்தும் இறப்புக்குட்பட்டவை. இறப்பு இருப்பதாலேயே, அவை (மீண்டும்) பிறக்கின்றன. எனவே, பிறப்பு என்பது இறப்புடன் இணைந்துள்ளது. எங்கே பிறப்பு இருக்கிறதோ, அங்கே இறப்பும் இருக்கிறது!

**கேள்வி கேட்பவர்:** எதனால் மரணம் ஏற்படுகிறது?

**தாதாஶ்ரீ:** இந்த உடல் பிறந்தது என்பது ஒரு நிகழ்வு, அது பிரியாமல் இருக்காது, அல்லவா? நிகழ்வுகள் எப்பொழுதும் அவற்றின் உள்ளார்ந்த இயல்பினால் பிரியும் தன்மையை கொண்டிருக்கிறது. நீங்கள் படிக்க பள்ளிக்குச் சென்றபோது, அதற்கு ஒரு ஆரம்பம் இருந்தது, இல்லையா? பின்னர், அது முடிவுக்கு வந்தது, இல்லையா? எல்லாவற்றுக்கும் ஆரம்பமும், முடிவும் உண்டு. இவை அனைத்திற்கும் ஆரம்பமும், முடிவும் உண்டு. இது உங்களுக்கு புரியவில்லையா?

**கேள்வி கேட்பவர்:** எனக்கு புரிந்துவிட்டது!

**தாதாஶ்ரீ:** இவை அனைத்திற்கும் ஆரம்பம் மற்றும் முடிவு இருக்கிறது, ஆனால் இதன் ஆரம்பத்தையும், முடிவையும் அறிந்தவர் யார்? ஆரம்பம் மற்றும் முடிவு உள்ளவை அனைத்தும் தற்காலிகமானவை ஆகும். ஆரம்பம் உள்ள ஏதொன்றுக்கும் முடிவு இருக்கிறது, ஆரம்பம் உள்ளதற்கு கண்டிப்பாக முடிவு உண்டு. இவை அனைத்தும் தற்காலிகமானவை. ஆனால், தற்காலிகமானவைகளை அறிந்தவர் யார்? ‘நீ’ நிரந்தரமானவன். ஏனென்றால், இவை அனைத்தும் தற்காலிகமானவை என்று ‘நீ’ கூறுவதால், ‘நீ’ நிரந்தரமானவன் என்று அர்த்தம். எல்லாம் தற்காலிகமானதாக இருந்தது என்றால், தற்காலிகமானவை என்று எதையும் அழைக்க வேண்டிய அவசியமில்லை. தற்காலிகம் என்பது ஒப்பிடும் சொல். நிரந்தரமான ஒன்று இருப்பதால் தான், தற்காலிகமான ஒன்று இருக்கிறது.

## மரணத்திற்கான காரணம்

**கேள்வி கேட்பவர்:** ஏன் மரணம் உண்டாகிறது?

**தாதாஸ்ரீ:** பிறக்கும் நேரத்தில், மனம், பேச்சு, உடல் ஆகிய மூன்று ‘பேட்டரிகள்’ கருவில் பலன் கொடுக்கத் தொடங்குகின்றன. இந்த மூன்று ‘பேட்டரிகளின்’ பலன்கள் முடிவடையும் வரை, ‘பேட்டரிகளின்’ கணக்கு முடிவடையும் வரை, ‘பேட்டரிகள்’ இருக்கின்றன. அவை தீர்ந்துவிட்டால், அதை தான் மரணம் என்று குறிப்பிடப்படுகிறது. இருப்பினும், சார்ஜ் தீர்ந்தவுடன் அடுத்த ஜென்மத்திற்கான புதிய ‘பேட்டரிகள்’ சார்ஜ் செய்யப்பட்டுகின்றன. அடுத்த ஜென்மத்திற்கான புதிய ‘பேட்டரிகள்’ உள்ளுக்குள் தொடர்ந்து சார்ஜ் செய்யப்பட்டு, பழைய பேட்டரிகள் டிஸ்சார்ஜ் ஆகிக்கொண்டிருகின்றன. இதே முறையில், சார்ஜ் மற்றும் டிஸ்சார்ஜ் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதற்கு காரணம், ஒருவருக்கு (‘நான் சந்துபாய்’ என்ற) தவறான புரிதல் உள்ளது. எனவே, அதன் மூலம் (இறப்புக்கான) காரணங்கள் உருவாக்கப்படுகின்றன. தவறான புரிதல் இருக்கும் வரை, விருப்பு மற்றும் வெறுப்பு ஏற்படுகிறது, இது புதிய காரணங்களை உருவாக்குகிறது. ஒருமுறை இந்த தவறான புரிதல் நீங்கி, சரியான புரிதல் (‘நான் சுத்தாத்மா’) நிலைநிறுத்தப்பட்டவுடன்; விருப்பு, வெறுப்பு மற்றும் புதிய காரணங்கள் எழுவதில்லை.

## மறுபிறவி எடுத்தல்

**கேள்வி கேட்பவர்:** உடலுடன் இருக்கும் ஆத்மா இறந்த பிறகு மீண்டும் (மறுபிறவி எடுக்கிறது) அல்லவா?

**தாதாஸ்ரீ:** வெளிநாட்டினருக்கு (மறுபிறவியில் நம்பிக்கை

இல்லாதவர்களுக்கு) ஆத்மா மறுபடியும் பிறவி எடுப்பதில்லை. முஸ்லீம்களுக்கு (மறுபிறவியில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு) ஆத்மா மறுபடியும் பிறவி எடுப்பதில்லை. ஆனால், உங்களுக்கு மறுபடியும் ஆத்மா பிறவி எடுக்கிறது. உங்களுக்குள் இருக்கும் கடவுள் உங்களுக்கு எந்த அளவிற்கு அருள் புரிகிறார் என்றால், மீண்டும் ஆத்மா பிறவி எடுக்கிறது. தற்போதைய வாழ்க்கையில் இறந்தவுடன், ஆத்மா மற்றொரு வாழ்க்கை கதிக்குச் செல்கிறது. ஆனால், மற்றவர்களுக்கு ஆத்மா பிறவி எடுப்பதில்லை.

இப்போது, உண்மையில், உடலைப் பிரிந்த ஆத்மா திரும்ப வருவதில்லை என்று இல்லை. மறுபிறவியில் நம்பிக்கை இல்லாதவர்களின் கொள்கை என்னவென்றால், ஒருவர் இறந்துவிட்டால், அவர் முழுமையாக இறந்துவிடுகிறார். ஆனால், உண்மையில், அவர் திரும்ப வருகிறார். ஆனால் அவர்களுக்கு இது புரிவதில்லை. அவர்களுக்கு மறுபிறவியைப் பற்றிய புரிதல் இல்லை. நீங்கள் மறுபிறவியைப் புரிந்துகொள்கிறீர்கள், அல்லவா!

உடல் இறக்கும் போது, அது உயிரற்றதாகிவிடுகிறது, அதன் அடிப்படையில், இறப்பதற்கு முன்பு உடலில் இருந்த ஆத்மா இப்போது பிரிந்து வேறெங்கோ சென்று விட்டது என்று நம்மால் ஊகிக்க முடியும். வெளிநாட்டினர் (மறுபிறவியில் நம்பிக்கை இல்லாதவர்கள்) அந்த ஆத்மா தான் வாழ்ந்து கொண்டிருந்ததாகவும், அது தற்போது இறந்துவிட்டதாகவும் முடிவு செய்கிறார்கள். இதை நாம் ஏற்றுக்கொள்ளமாட்டோம். மறுபிறவியை நாம் நம்புகிறோம். நாம் (மறுபிறவியில் நம்பிக்கை கொண்டவர்கள்) வளர்ச்சி (ஆன்மீக ரீதியாக) அடைந்தவர்கள். நாம் *விதராக்* பகவானின் விஞ்ஞானத்தை புரிந்துகொள்கிறோம். *விதராக்* பகவானின்

விஞ்ஞானம் குறிப்பிடுவது என்னவென்றால், மறுபிறவி என்று இருப்பதினால் தான் நாம் அனைவரும் ஒன்றுகூடி உள்ளோம், அதைத்தான் இந்திய மக்கள் நம்புகிறார்கள். இதனால்தான் ஆத்மா என்ற ஒன்று இருப்பதை நாம் நம்புகிறோம். இல்லையெனில், மறுபிறவிக்கு ஆதாரம் இல்லை என்றால், ஆத்மா என்று ஒன்று இருப்பதாக எப்படி நம்புவது?

அப்படியானால், மறுபிறவி எடுப்பவர் யார்? ஆத்மா இருப்பதால்தான் மறுபிறவி இருக்கிறது; ஏனென்றால், உடல் இறந்தவுடன், அது தகனம் செய்யப்படுவதை நாம் கண்களால் காண்கிறோம்.

எனவே, ஆத்மாவைப் பற்றிய புரிதல் நிலைநிறுத்தப்பட்டவுடன், உண்மையில் நமக்கு ஒரு தீர்வு கிடைக்கிறது, அல்லவா! இருப்பினும், இந்தப் புரிதல் நிலைநிறுத்தப்படுவதற்கு வாய்ப்பில்லை தானே! அதனால்தான், ‘உன் ஆத்மாவை அறிந்துகொள்!’ என்று வேதம் எழுதுபவர்கள் அனைவரும் கூறியுள்ளனர். இப்போது, ஆத்மாவை அறிந்துக் கொள்ளாமல் செய்யும் அனைத்தும், அவருக்குப் பலனளிக்காது, உதவாது. எனவே, முதலில் ஆத்மாவை அறிந்து கொள்ளுங்கள். பிறகு எல்லா தீர்வுகளும் கிடைத்துவிடும்!

## மறுபிறவி எடுப்பவர் யார்?

**கேள்வி கேட்பவர்:** மறுபிறவி எடுப்பவர் யார்? உயிர் (ஜீவாத்மா) பிறவி எடுக்கிறதா அல்லது ஆத்மாவா?

**தாதாஸ்ரீ:** இல்லை, யாரும் மறுபிறவி எடுக்க வேண்டியது இல்லை. அது தானாக நிகழ்கிறது. இந்த உலகம் முழுவதும்

தானாக நிகழ்கிறது (தானாக செயல்படுகிறது)!

**கேள்வி கேட்பவர்:** சரி, இருப்பினும், அதை யார் செயல்படுத்துகிறார்? உயிர் செயல்படுத்துகிறதா அல்லது ஆத்மாவா?

**தாதாஸ்ரீ:** இல்லை, ஆத்மாவிற்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. எல்லாமே உடலில் இருக்கும் உயிர் (ஜீவாத்மா) மூலமாகவே நடக்கிறது. உலக இன்பத்தை விரும்புபவருக்கு மீண்டும் பிறக்கும் உரிமை கிடைக்கிறது. உலக இன்பத்தை விரும்பாதவர் மீண்டும் பிறக்கும் தகுதியை இழந்து விடுகிறார்.

## இந்த ஜென்மத்திற்கு மற்றும் அடுத்த ஜென்மத்திற்கு இடையில் உள்ள தொடர்பு

**கேள்வி கேட்பவர்:** ஒரு மனிதனின் ஒவ்வொரு பிறப்பும், முந்தைய வாழ்க்கையுடன் தொடர்புடையதா?

**தாதாஸ்ரீ:** ஒவ்வொரு வாழ்க்கையும் (அடுத்த வாழ்க்கைக்கான) முந்தைய வாழ்க்கையே. அதாவது, ஒவ்வொரு வாழ்க்கையும் முந்தைய வாழ்க்கையுடன் தொடர்புடையது.

**கேள்வி கேட்பவர்:** ஆனால் முந்தைய வாழ்க்கைக்கும் இந்த வாழ்க்கைக்கும் என்ன தொடர்பு?

**தாதாஸ்ரீ:** தற்போதைய வாழ்க்கை அடுத்த ஜென்மத்திற்கு முந்தைய வாழ்க்கை என்பதாகும். கடந்த ஜென்மம் இந்த வாழ்க்கையின் முந்தைய வாழ்க்கை. எனவே, இந்த வாழ்க்கை அடுத்த வாழ்க்கைக்கான முந்தைய வாழ்க்கையாக கருதப்படுகிறது.

**கேள்வி கேட்பவர்:** ஆம், அது உண்மைதான். ஆனால், முந்தைய ஜென்மத்தில் நடந்தவற்றிற்க்கும், இந்த வாழ்க்கைக்கும் சம்பந்தம் உள்ளதா?

**தாதாஸ்ரீ:** ஆம், ஒரு பெரிய தொடர்பு இருக்கிறது. அதைத் தவிர வேறு எதுவும் இல்லை! முந்தைய ஜென்மத்தில் விதைக்கப்பட்ட விதைகள், இந்த ஜென்மத்தில் பலன்களை (பழங்களை) தருகின்றன. அப்படியானால் விதைக்கும் விதைகளுக்கும், அதன் பழங்களுக்கும் வித்தியாசம் இல்லையா? அவை இரண்டிற்கும் இடையில் தொடர்பு இருக்கிறதா இல்லையா?! நாம் தினையை விதைத்தால் அதுவே முன்ஜென்மம். அதிலிருந்து வளரும் செடிதான் தற்போதைய வாழ்க்கை. பின்னர், இந்த செடியிலிருந்து உதிர்ந்த விதைகள் முந்தைய வாழ்க்கை என்றும், அதிலிருந்து வளரும் செடி அடுத்த வாழ்க்கை என்றாகிறது. இது உங்களுக்கு புரிகிறதா?

**கேள்வி கேட்பவர்:** ஒரு நபர் ஒரு சாலை வழியாக நடந்து செல்கிறார். மேலும், இன்னும் பலர் அந்த சாலை வழியாக நடந்து செல்கின்றனர். ஆனால், ஒரு பாம்பு குறிப்பிட்ட நபர்களை மட்டுமே நெருங்கி வருகிறது. இது முந்தைய வாழ்க்கையின் விளைவா?

**தாதாஸ்ரீ:** ஆம், அதைத்தான் நான் துல்லியமாகச் சொல்கிறேன். மறுபிறவி என்ற கருத்து, நிச்சயமாக இருக்கிறது. அதனால்தான் பாம்பு ஒருவரைக் கடிக்கிறது; மறுபிறவி என்று எதுவும் இல்லை என்றால், பாம்பு அந்த குறிப்பிட்ட நபரைக் கடிக்காது. மறுபிறவி இருக்கிறது, அதன் மூலம் தான் ஒருவரின் முந்தைய வாழ்க்கையின் கர்மக் கணக்குகள் தீர்க்கப்படுகிறது. இவை அனைத்தும் கர்மக் கணக்குகளை தீர்க்கப்படுவதே

ஆகும். பதிவேட்டில் உள்ள கணக்குகள் எப்படி தீர்த்து வைக்கப்படுகிறதோ, அதே போல இந்த கர்மக் கணக்குகள் அனைத்தும் தீர்த்து வைக்கப்படுகின்றன. மேலும், நமது ஆன்மீக வளர்ச்சியின் மூலம் தான் இந்த கர்ம கணக்குகளை எல்லாம் புரிந்துகொள்ள முடிகிறது. அதனால்தான் இங்குள்ள (இந்தியாவில்) பலர் மறுபிறவியின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர்! இருப்பினும், “மறுபிறவி நிச்சயமாக இருக்கிறது” என்று அவர்களால் கூற முடிவதில்லை. மறுபிறவி இருப்பதை அவர்களால் நிரூபிக்க முடிவதில்லை. இருந்தாலும், இந்த எடுத்துக்காட்டுகள் அனைத்தின் மூலமாகவும், மறுபிறவி ஒன்று உள்ளது என்பது அவர்களின் நம்பிக்கையில் நிறுவப்பட்டுவிட்டது!

ஒரு பெண், “அவளுக்கு ஏன் இவ்வளவு நல்ல மாமியார் கிடைத்திருக்கிறாா், எனக்கு ஏன் இப்படிப்பட்ட மாமியாா் கிடைத்தாா்?” என்று கேட்கலாம். எனவே, ஒருவர் இதுபோன்ற எல்லாவிதமான சூழ்நிலைகளையும் எதிா்க்கொள்ள வேண்டியிருக்கும்.

## உங்களுடன் வேறு எதுவெல்லாம் வருகின்றது?

**கேள்வி கேட்பவா்:** ஒரு ஆத்மா மற்றொரு புதிய உடலுக்குள் நுழையும்போது, அந்த ஆத்மா ஐந்து புலன் உறுப்புகளையும், மனதையும், அதனுடன் மற்ற அனைத்தையும் கொண்டு செல்கிறதா?

**தாதாஸ்ரீ:** இல்லை, அப்படி ஒன்றுமில்லை. உணர்வுத்திறன் கொண்ட உறுப்புகளின் திறன் முடிந்து, அவை ஒரு முடிவுக்கு வருகின்றன. புலன் உறுப்புகள் உண்மையில் இறந்துப்போய் விடுகின்றன. ஆகையால், புலன் உறுப்புகள் ஆத்மாவுடன்

செல்லுவதில்லை. கோபம், பெருமை, கபடம், பேராசை ஆகியவை மட்டுமே ஆத்மாவுடன் செல்கிறது. கோபம், பெருமை, கபடம், பேராசை ஆகியவை காரண உடலில் உள்ளடங்கி உள்ளன. சரி, சூட்சும உடல் அல்லது நுண்ணுடல் (எலக்ட்ரிக்கல் பாடி) என்பது எப்படி இருக்கும்? ஒருவர் இறுதி முக்தி (மோட்சம்) அடையாத வரை, சூட்சும உடல் (உடலிலுள்ள ஆத்மாவுடன்) ஒன்றாகவே இருக்கும். ஒருவர் எந்த வாழ்க்கை கதியை அடைந்தாலும், சூட்சும உடல் ஆத்மாவுடன் ஒன்றாகவே இருக்கும்.

## சூட்சும உடல் அல்லது நுண்ணுடல் (எலக்ட்ரிக்கல் பாடி)

எனவே, (உடலிலுள்ள) ஆத்மா உடலை விட்டுத் தனியாகச் செல்வதில்லை. இறக்கும் நேரத்தில் (உடலிலுள்ள) ஆத்மா, அனைத்து கர்மங்களைக் கொண்ட காரண உடல், மூன்றாவதாக, சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) ஆகிய மூன்றும் உடலை விட்டு ஒன்றாக வெளியேறுகின்றன. உலக வாழ்க்கை இருக்கும் வரை, ஒவ்வொரு உயிரிலும் சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) கண்டிப்பாக இருக்கும்! காரண உடல் உருவாகும் போது, சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) அதனுடன் இருக்கும். சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) என்பது ஒவ்வொரு உயிரினத்திலும் பொதுவாக இருப்பது, அதன் அடிப்படையில் தான், உடல் செயல்படுகிறது. நாம் உண்ணும் உணவை ஜீரணிக்கும் செயல்முறையை, சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) மேற்கொள்கிறது. சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) தான் இரத்தத்தை உற்பத்தி செய்கிறது, இரத்த ஓட்டத்தை மேற்கொள்கிறது. இதுவே அனைத்து செயல்பாடுகளையும் மேற்கொள்கிறது. பார்க்கும் திறனைக் கொண்டிருக்கும்

ஒளியானது, சூட்சும உடலால் (எலக்ட்ரிக்கல் பாடியால்) தான் உண்டாகிறது. மேலும் கோபம், பெருமை, கபடம் மற்றும் பேராசை ஆகியவை சூட்சும உடலால் (எலக்ட்ரிக்கல் பாடியால்) தான் ஏற்படுகிறது. ஆத்மாவில் கோபமோ, பெருமையோ, கபடமோ, பேராசையோ கிடையாது. *குஸ்ஸோ* (வன்முறை நோக்கமில்லாத கோபம்) கூட சூட்சும உடலின் (எலக்ட்ரிக்கல் பாடியின்) அதிர்வினால் ஏற்படுவதாகும்.

**கேள்வி கேட்பவர்:** கர்மாவை சார்ஜ் செய்யும் செயல்பாட்டில் சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) ஒரு பங்கு வகிக்க வேண்டும், இல்லையா?

**தாதாஶ்ரீ:** சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) இருந்தால் மட்டுமே (கர்மாவை) சார்ஜ் செய்ய முடியும். சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) இல்லையெனில், வேறெதுவும் செயல்படாது. சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) இருந்து, ஆத்மா இல்லாவிட்டாலும், எதுவும் செயல்படாது. இவை அனைத்தும் ‘கூட்டணி காரணங்கள்’ ஆகும்.

## ஆத்மா எப்போது கருவறைக்குள் நுழைகிறது?

**கேள்வி கேட்பவர்:** ஒரு தாயின் கருவறையில் சிசு அசைய தொடங்கும்போது தான் ஜீவாத்மா என்கிற உயிர் நுழைகிறது. இதுவே வேதங்களில் (இந்து வேதங்களில்) குறிப்பிடப்பட்டுள்ளது.

**தாதாஶ்ரீ:** இல்லை, இதுபோன்ற விஷயங்கள்; அனுபவத்தை அடிப்படையாக கொண்டவை அல்ல. இந்த விஷயங்கள் உண்மை இல்லை. அவை உலகத்தின் புரிதலிலிருந்து உருவாகின்றன. ஆத்மா இல்லாமல், கருமுட்டை ஒருபோதும் உருவாகாது. ஆத்மா

இருந்தால்தான் கருமுட்டை வளர்ச்சி அடையும், இல்லையெனில் அது உருவாகாது.

கருவறைக்குள் நுழைவதற்கு முன், கருமுட்டையைப் போல, ஆத்மாவும் செயலற்ற நிலையில் உள்ளது.

**கேள்வி கேட்பவர்:** கோழியின் முட்டையில் ஆத்மா துளையிட்டுக் கொண்டு, அதற்குள் நுழைகிறதா?

**தாதாஸ்ரீ:** இல்லை, அதெல்லாம் உலகத்தின் கற்பனைகள். உலக மக்களின் நம்பிக்கைகளின்படி, நீங்கள் சொல்பவை அனைத்தும் எழுதி வைக்கப்பட்டவைகளே ஆகும். இது எப்படி என்றால், காலநேரம் மற்றும் அனைத்து அறிவியல் சூழ்நிலை ஆதாரங்களும் ஒன்றிணையும் போதுதான் கருமுட்டை உருவாகிறது நேரம் ஆகும்.

ஆத்மா ஒன்பது மாதங்கள் (கருவில்) இருந்து, அதன்பின் அது (கரு) முழுமையாக உருவாகிறது. ஏழு மாதங்களில் ஒரு குழந்தை பிறந்துவிட்டால், அது முன்கூட்டியே பிறந்த முதிர்ச்சியற்ற கருவாக கருதப்படுகிறது; அதன் விளைவாக, அதன் மூளை முழுமையாக வளர்ச்சி அடைவதில்லை. ஏழு மாதங்களில் பிறந்த குழந்தையின் அனைத்து உறுப்புகளும் முழுமையாக வளர்ச்சி அடைவதில்லை. பதினெட்டு மாதங்களில் ஒரு குழந்தை பிறந்தால், அது முற்றிலும் வேறுபட்ட விஷயம்; அப்படி பிறந்த குழந்தையின் மூளை மிகவும் வளர்ச்சி அடைந்துவிடுகிறது. எனவே, ஒன்பது மாதங்களுக்கும் மேலாக கருவறையில் இருந்து பிறந்த குழந்தைகள் அதிக வளர்ச்சி அடைந்த மூளையுடன் இருக்கிறார்கள். இது உங்களுக்கு தெரியுமா?

நீங்கள் ஏன் எதுவும் சொல்லாமல் இருக்கிறீர்கள்? ‘இவர் (பதினெட்டு மாதத்தில் பிறந்தவர்)’ என்ற பழமொழியை நீங்கள் கேள்விப்பட்டு இருக்கிறீர்களா? இதை நீங்கள் முன்பு கேள்விப்பட்டு இருக்கிறீர்களா? நீங்கள் இதற்கு முன்பு கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள், இல்லையா? மக்கள், “அவரை மறந்து விடுங்கள், அவர் பதினெட்டு மாதங்களில் பிறந்தவர்!” என்று கூறுவர். அத்தகையவர்கள் மிகவும் புத்திசாலிகள். அவர்கள் தாயின் வயிற்றில் இருந்து வெளியே வருவதில்லை; அந்த கருவறைக்குள்ளே பதினெட்டு மாதங்கள் சிறப்பாக இருக்கிறார்கள்.

## இறப்புக்கும், பிறப்புக்கும் இடையே எவ்வளவு இடைவெளி நேரம் உள்ளது?

**கேள்வி கேட்பவர்:** அப்படியானால், ஒரு உடலை விட்டு மற்றொரு உடலைப் பெறுவதற்கிடையே எவ்வளவு நேரம் இருக்கிறது?

**தாதாஸ்ரீ:** இடைவெளி நேரம் இருப்பதே இல்லை, உடனடியாக மற்றொரு உடலைப் பெற்றுவிடுகிறது. ஆத்மாவானது, ஒரே சமயத்தில் இங்கேயும் இருக்கிறது; அதாவது இந்த உடலை விட்டு வெளியேறிக் கொண்டும் இருக்கிறது, அதே சமயத்தில் அது (அடுத்த பிறவியின் தாயின்) கருவறையிலும் இருக்கிறது. இதற்கு காரணம் என்னவென்றால் இதில் காலநேரம் சம்மந்தப்பட்டுள்ளது; அந்த சமயத்தில் தான், விந்தணு மற்றும் கருமுட்டையும் ஒன்று சேருகிறது. ஆத்மா உடலை இங்கே விட்டுச் செல்லும் அதே சமயத்தில் தான், அங்கே இந்த விந்தணுவுக்கும் கருமுட்டைக்குமான சேர்க்கை நிகழ்கிறது. ஆத்மா இங்கிருக்கும் உடலிலிருந்து வெளியேறும் சமயத்தில் தான், அங்கு விந்தணு மற்றும்

கருமுட்டையின் சேர்க்கை நிகழ்கிறது. இவை இரண்டும் ஒன்று சேரும் போதுதான், ஆத்மா இந்த உடலிலிருந்து வெளியேறுகிறது. விந்தணுவுக்கும் கருமுட்டைக்குமான சேர்க்கை நிகழவில்லையெனில், அந்த ஆத்மா இறக்கும் நபரின் உடலில் இருந்து வெளியேறாது. எனவே, ஒரு நபர் இறந்தவுடன், அவருடைய உடலில் இருக்கும் ஆத்மா நேரடியாக மற்றொரு கருவறைக்கு செல்கிறது. எனவே, என்ன நடக்கப்போகிறது என்று ஒருவர் கவலைப்படத் தேவையில்லை. ஏனென்றால், இறந்தவுடன், சந்தேகத்திற்கு இடமின்றி மற்றொரு கருவறை பெறப்படுகிறது. மேலும், அந்த கருவறைக்குள் நுழைந்தவுடன், அனைத்து ஊட்டச்சத்துகள் மற்றும் அத்தியாவசிய சத்துக்கள் உடனடியாக கிடைக்கின்றன.

## இதன் மூலமாகத்தான் காரண உடல் உருவாகிறது

உலகம் முழுவதும் மாயையால் நிறைந்திருக்கிறது. அது எப்போதும் வெளிப்புற செயல்களாலேயே காட்சிப்படுத்தப்படுகிறது. *த்யான்* (தியானம் எனும்) அகநிலையை அது கருத்தில் கொள்ளாது. உயிரினத்தின் அகநிலையே அடுத்த ஜென்மத்திற்கான *புருஷார்த்* (உண்மையான ஆன்மீக முயற்சியாக) இருக்கிறது, அதேசமயம் புறச்செயல்பாடுகள் கடந்தகால வாழ்க்கையில் கொண்ட அக நிலையின் விளைவுகளாகும். இருப்பினும், உள்நோக்கமே அடுத்த ஜென்மத்திற்கான பலனைத் தருகிறது. இந்த அக நிலையின் அடிப்படையில், வெளியில் இருந்து அணுக்கள் (உடலுக்குள்) இழுக்கப்படுகிறது. மேலும் அவை நடைமுறையில் கொண்டிருக்கும் அக நிலையால் வண்ணம் பூசப்படுகின்றன. மேலும், அவை நுட்பமான முறையில் உள்ளே

சேர்க்கப்படுகின்றன. இப்படித்தான் காரண உடல் உருவாகிறது. பின்னர், கர்ம தொடர்புகளின் அடிப்படையில், அந்த ஆத்மா தாயின் கருவறையில் நுழையும் போது, செயல்திறன் மிக்க உடல் உருவாகத் தொடங்குகிறது. ஒரு நபர் இறக்கும் போது, ஆத்மா, சூட்சும உடல் *(சூக்ஷ்ம ஷரீர்)* மற்றும் காரண உடல் *(காரன் ஷரீர்)* ஆகியவை அனைத்தும் ஒன்றாக அந்த உடலை விட்டு வெளியேறி, மற்றொரு உடலுக்குள் செல்கின்றன. சூட்சும உடல் அனைவருக்கும் பொதுவானது. ஆனால், காரண உடல் ஒவ்வொரு நபருக்கும் வேறுபட்டது. அது தற்போதைய ஜென்மத்தில் அவர் விதைத்த காரணங்களைப் பொறுத்தது. நுட்பமான உடல் என்றது சூட்சும உடல் (எலக்ட்ரிக்கல் பாடி) என்பது ஆகும்.

## காரணம் மற்றும் விளைவுகளின் சங்கிலித் தொடர்

இறப்புக்குப் பின் பிறப்பும், பிறப்புக்குப் பின் இறப்பும் வருகிறது, அவ்வளவுதான். இது அப்படியே தொடர்ந்து கொண்டிருக்கிறது. இப்போது, பிறப்பும் இறப்பும் ஏன் நிகழ்கிறது? காரணங்கள் மற்றும் விளைவுகள், விளைவுகள் மற்றும் காரணங்கள், ஆகியவற்றின் சுழற்சியின் காரணமாகவே நிகழ்கிறது. இப்போது, இந்த காரணங்களை அழித்துவிட்டால், எல்லா விளைவுகளும் முடிவுக்கு வந்துவிடும், பின்னர் ஒரு புதிய பிறவி எடுக்க வேண்டிய அவசியமில்லை! அப்படித்தானே!

ஒரு நபரின் வாழ்நாள் முழுவதும் இந்த காரணங்கள் உருவாக்கப்பட்டால், அந்த காரணங்கள் என்ன ஆகும்? காரணங்கள் உருவாக்கப்பட்டவுடன், அவை தவிர்க்க முடியாமல் அவற்றின் விளைவுகளைத் தருகின்றன. காரணங்களை உருவாக்குவது என்றால் என்னவென்று உங்களுக்குப் புரிகிறதா?

ஒவ்வொரு செயல்களின் மூலமும் காரணங்கள் உருவாக்கப்படுகின்றன. “நீ எதற்கும் உபயோகமில்லாதவன்” என்று யாராவது உங்களை அவமானப்படுத்தினால், அதற்கு பதிலடியாக “உன் தந்தை உபயோகமில்லாதவர்” என்கிற உங்களுடைய மனதில் தோன்றும் (உள்நோக்கம்) உங்களது காரணமாக கருதப்படுகிறது. அந்த நபர் (கர்ம) சட்டத்தின் அடிப்படையிலேயே உங்களை உபயோகமில்லாதவர் என்று கூறினார். ஆனால், நீங்கள் எதிர்பேச்சு பேசுவதன் மூலம் சட்டத்திற்கு எதிராகச் சென்று விட்டீர்கள். இது உங்களுக்கு புரியவில்லையா? நீங்கள் ஏன் எதுவும் பேசாமல் இருக்கிறீர்கள்?

**கேள்வி கேட்பவர்:** ஆம், எனக்குப் புரிகிறது.

**தாதாஸ்ரீ:** எனவே, இந்த ஜென்மத்தில் காரணங்கள் உருவாக்கப்படுகின்றன. அதன் பலனை அடுத்த ஜென்மத்தில் நாம் அனுபவிக்க வேண்டும்!

அதாவது செயலின் விளைவாக ஏற்படும் (*மோஹ்)* மாயை பற்றுதல் (விளைவு) காரணத்திற்கு உண்டான மாயை பற்றுதல் என்று மக்கள் புரிந்துகொள்கிறார்கள். ‘எனக்கு கோபம் வருகிறது’ என்று ஒருவர் வெறுமனே நம்பிக்கொள்கிறார். இருப்பினும், ஒருவர் மாயை பற்றுதலில் *(பிராந்த்தி)* இருக்கும் வரை மட்டுமே அவருக்கு வன்முறை நோக்கத்துடன் *(க்ரோத்)* கோபம் இருக்கும். உண்மையில், அது கோபம் அல்ல. அது ஒரு விளைவு தான். மேலும், இந்த காரணங்கள் முடிவுக்கு வந்துவிட்டால், விளைவு மட்டுமே மீதம் இருக்கும். மேலும், காரணங்கள் முடிவுக்கு வந்துவிட்டால், விளைவுகளுக்கு அவர் பொறுப்பல்ல. மேலும் இந்த விளைவுகள் வெளிப்படுவதைத் தடுக்கலாகாது.

## காரணங்களை நிறுத்த முடியுமா?

**கேள்வி கேட்பவர்:** உடலுக்கும் ஆத்மாவிற்கும் இடையே ஒரு தொடர்பு இருக்கிறது, இல்லையா?

**தாதாஸ்ரீ:** இந்த உடல் என்பது ஆத்மாவின் அஞ்ஞான நிலையின் விளைவால் தான் உருவாகிறது. எந்த காரணங்கள் உருவாக்கப்பட்டதோ அதன் விளைவு தான் இந்த உடல். யாராவது உங்கள் மீது பூக்களை தூவினால், நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள். அவர்கள் உங்களை திட்டினால், நீங்கள் கோபப்படுவீர்கள். வருத்தம் அடைதல் அல்லது மகிழ்ச்சி அடைதல் போன்ற புற வெளிப்பாடுகள் முக்கியமல்ல; உள்நோக்கத்தின் *(பாவ்)* மூலமாகவே கர்மா ஏற்படுகிறது. அது அடுத்த ஜென்மத்தில் வெளியேற்றப்படுகிறது. அப்போது அது ஒரு விளைவாக வெளிப்படுகிறது. இந்த மனம், பேச்சு, உடல் ஆகிய மூன்றும் ஒரு விளைவுதான். விளைவை அனுபவிக்கும் போது, புதிய காரணங்கள் உருவாகின்றன. அவை அடுத்த ஜென்மத்தில் விளைவுகளைக் கொடுக்கின்றன. இந்த முறையில் தான், காரணம் மற்றும் விளைவு, விளைவு மற்றும் காரணம் என்ற சுழற்சி நிலைத்திருக்கிறது.

மனித கதியில் இருக்கும்போது மட்டுமே இந்த காரணங்களை நிறுத்துவது சாத்தியமாகிறது. மற்ற எல்லா வாழ்க்கை கதிகளிலும் விளைவுகள் மட்டுமே இருக்கின்றன. மனித கதியில், காரணங்கள் மற்றும் விளைவுகள் என இரண்டும் இருக்கின்றன. 'நாங்கள்' (ஞானி புருஷர்), ஞானத்தைக் வழங்கும்போது, 'நாங்கள்' காரணங்களுக்கு முற்றுப்புள்ளி

வைக்கிறோம். அதன் பிறகு, புதிய விளைவுகள் எதுவும் இருக்காது.

## அதுவரை அலைவுதிரிவு தொடரும்...

செயல் விளைவுடைய உடல் (‘எபக்ட்டிவ் பாடி’) என்பது மனம், பேச்சு மற்றும் உடல் ஆகிய மூன்று சார்ஜ் செய்யப்பட்ட ‘பேட்டரிகளை’ குறிக்கிறது, பிறகு அவை புதிய காரணங்களை உருவாக்கிக் கொண்டே இருக்கும். எனவே, இந்த வாழ்க்கையில், மனம், பேச்சு மற்றும் உடல் வெளியேற்றம் அடைந்து கொண்டே இருக்கும், அதே சமயத்தில், புதிய ‘பேட்டரிகள்’ உள்ளே சார்ஜ் செய்யப்பட்டுக்கொண்டு இருக்கிறது. சார்ஜ் செய்யப்படுகிற ‘பேட்டரிகள்’ அடுத்த ஜென்மத்திற்கானாவை. கடந்த ஜென்மத்தில் சார்ஜ் செய்த ‘பேட்டரிகள்’; இப்போது வெளியேறுகின்றன. *ஞானி புருஷர்* (தானும் ஆத்ம ஞானம் அடைந்து மற்றவர்களுக்கும் ஆத்ம ஞானம் வழங்குபவர்) புதிதாக சார்ஜ் செய்யப்படுவதை நிறுத்துகிறார். எனவே, பழையவை தொடர்ந்து டிஸ்சார்ஜ் ஆகிக்கொண்டே இருக்கின்றன.

மரணத்திற்குப் பிறகு, ஆத்மா மற்றொரு கருவறைக்குள் நுழைகிறது. ஒருவர் ஆத்ம ஞானம் அடையாத வரை, பலவிதமான வாழ்க்கை கதிகளில் அவர் அலைந்து கொண்டே இருப்பார். ஒருவர் மனம் மற்றும் புத்தியின் பிடியில் ஒன்றிணைந்து இருக்கும் வரை, அவருடைய உலக வாழ்க்கை தொடரும். ஏனென்றால், அவற்றின் பிடியில் ஒன்றிணைந்து இருப்பது என்பது அடுத்த பிறவிக்கு விதைப்பது. மேலும், ஒரு பிறவிக்கான விதைகள் விதைக்கப்பட்டுக் கொண்டே இருக்கும் வரை, உலக வாழ்க்கை தொடரும் என்று பகவான் கிருஷ்ணர் கூறியுள்ளார். புதிய

விதைகளை விதைக்கப்படுவது யாருக்கு நிறுத்தப்படுகிறதோ, அவருடைய உலக வாழ்க்கையும் முற்றுப் பெற்றுவிடுகிறது.

## பரிணாம வளர்ச்சியின் அறிவியல்

**கேள்வி கேட்பவர்:** பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டின் படி (தியரி ஆப் எவல்யூஷன்), ஒரு உயிரினம் ஒற்றை-உணர்திறன் கொண்ட உயிரினமாக இருந்து, இரு-உணர்திறன் கொண்ட உயிரினமாக மாறுகிறது, அது மனித இனத்தை அடையும் வரை தொடர்ந்து வளர்ச்சியடைந்து கொண்டு இருக்கிறது. மேலும், மனித கதியை அடைந்த பிறகு, மீண்டும் விலங்கு கதிக்கு செல்கிறது. எனவே, இது பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டிற்கு சிறிது முரண்பாடாக இருப்பது போல் தெரிகிறதே. தயவு செய்து இது குறித்து தெளிவுபடுத்த முடியுமா?

**தாதாஸ்ரீ:** இல்லை, இதில் எந்த முரண்பாடும் இல்லை. பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு சரியானதே. இருப்பினும், பரிணாம வளர்ச்சிக் கோட்பாடானது, ஒரு உயிரினம் மனித கதியை அடையும் வரை மட்டுமே சரியானது. அதற்குப் பின்னர் என்ன நடக்கிறது என்பது அவர்களுக்கு (விஞ்ஞானிகளுக்கு) தெரியாது.

**கேள்வி கேட்பவர்:** ஒரு நபர் மனித இனத்திலிருந்து விலங்கு இனத்திற்கு திரும்ப செல்கிறார் என்பது உண்மையா?

**தாதாஸ்ரீ:** டார்வினின் கோட்பாட்டில் குறிப்பிட்டுள்ளபடி, ஒரு உயிரினம் மனித இனத்தை அடையும் வரை வளர்ச்சியடைந்து கொண்டே இருக்கிறது. அது மனித இனத்தை அடைந்த பிறகு, அஹங்காரம் இருப்பதால், ஒருவர் செய்பவனாகிறார். ஒருவர் கர்மாவைச் செய்பவர் என்றாவதால், அவர் கர்மாவின்

(விளைவுகளின்) அடிப்படையில் துன்பப்பட வேண்டும் அல்லது இன்பங்களை அனுபவிக்க வேண்டும். அவா் 'டெபிட்' (தீய கர்மா) உருவாக்கினால், அவா் விலங்கு கதிக்கு செல்ல வேண்டும். மேலும் அவா் 'கிரெடிட்' (புண்ணிய கர்மாவை) உருவாக்கினால், அவா் தேவ கதிக்கு செல்ல வேண்டும். இவை இரண்டும் இல்லையெனில், மனித வாழ்க்கை கதியில், அவர் பொருள் வசதிகளையும், ஆடம்பரங்களையும் பெறுவாா். எனவே, மனித வாழ்க்கை கதியை அடைந்த பின்னர், ஒரு நபருடைய அடுத்த ஜென்மம் என்றது அவரிடம் இருக்கும் 'கிரெடிட்' மற்றும் 'டெபிட்' என்பதை சார்ந்தது.

## அதன் பின்னர், 84 லட்சம் உயிரின வாழ்க்கைகளில் அலைவுதிரிவு இருக்காது

**கேள்வி கேட்பவா்:** ஒருவர் 84 லட்சம் உயிரின வாழ்க்கைகளில் அலைந்து திரிந்த பிறகே மனிதப் பிறவியை அடைந்திருக்கிறாா், என்று கூறுகிறாா்கள். பிறகு மீண்டும் அதே போல தான் அலைந்து திரிந்த பிறகு மனிதப் பிறவி கிடைக்கும் என்று கூறப்படுகிறது, அல்லவா?

**தாதாஸ்ரீ:** இல்லை, அப்படி இல்லை. ஒருமுறை மனிதனாகப் பிறந்த பிறகு, மீண்டும் 84 லட்சம் உயிரின வாழ்க்கைகளின் முழு சுழற்சியில் திரிய செல்ல வேண்டியதில்லை. ஒருவருக்கு மிருகத்தனமான எண்ணங்கள் இருந்தால், அவர் அதிகபட்சம் எட்டு பிறவிகளுக்கு விலங்கு கதியிலேயே மறுபிறவி எடுத்தாக வேண்டும். அதுவும், நூறு-இருநூறு வருட காலத்திற்கு மட்டுமே. அதன் பிறகு, அவர் மனித வாழ்க்கை கதிக்குத் திரும்புகிறார்.

ஒருமுறை மனித வாழ்க்கை கதியை அடைந்த பிறகு, 84 லட்சம் உயிரின வாழ்க்கைகளில் அவர் அலைந்துதிரிய வேண்டியதில்லை.

**கேள்வி கேட்பவர்:** ஒரே ஆத்மாதான் 84 லட்சம் முறை அலைகிறது, இல்லையா?

**தாதாஸ்ரீ:** ஆம், அதே ஆத்மா தான்.

**கேள்வி கேட்பவர்:** ஆனால் ஆத்மா தூய்மையானது, இல்லையா?

**தாதாஸ்ரீ:** ஆத்மா இப்போதும் தூய்மையாக தான் உள்ளது. 84 லட்சம் உயிரின வாழ்க்கைகளில் அலைந்த பிறகும், அது தூய்மையாக தான் இருந்தது. அது தூய்மையாக தான் இருக்கிறது, அது தூய்மையாக தான் இருக்கும்!

## அடுத்த ஜென்மம் இறுதி நேர ஆசைகளின்படியே அமைகிறது

**கேள்வி கேட்பவர்:** ஒருவரின் அடுத்த ஜென்மம், இறக்கும் போது அவருக்கு இருக்கும் ஆசைகளை அடிப்படையாக கொண்டு அமைவது அல்லவா?

**தாதாஸ்ரீ:** ஆம். இறந்தவருக்கு இப்படிப்பட்ட ஆசைகள் இருந்ததாக நம் மக்கள் கூறுகின்றனர். ஆனால், அந்த ஆசைகள் அந்த இறுதி நேரத்தில் வெறுமனே புதிதாக துளிர்விட்டு வருவதில்லை. அவை உண்மையில் முழு வாழ்க்கையின் இருப்புநிலைக் குறிப்பின் விளைவாக ஏற்படுவதாகும். உங்கள் வாழ்நாளில் நீங்கள் செய்த அனைத்து செயல்களின் இருப்புநிலைக் குறிப்பு, இறப்பதற்கு முந்தைய இறுதி

மணிநேரத்தில் பெறப்படுகிறது. இந்த இருப்புநிலைக் குறிப்பின் அடிப்படையில் தான் அடுத்த ஜென்மம் தீர்மானிக்கப்படுகிறது.

## மனிதர்கள் மட்டும்தான் மனிதர்களாக மறுபிறவி எடுக்கிறார்களா?

**கேள்வி கேட்பவர்:** மனிதர்கள் மட்டும்தான் மனிதர்களாக மறுபிறவி எடுக்கிறார்கள், இல்லையா?

**தாதாஸ்ரீ:** நீங்கள் தவறாக நினைக்கிறீர்கள். ஒரு பெண்ணின் வயிற்றில் இருந்து ஒரு மனிதன் மட்டுமே பிறக்க முடியும். கழுதை அங்கிருந்து பிறப்பது இல்லை. இருப்பினும், "நான் இறந்தவுடன், நான் நிச்சயமாக மனிதனாக மறுபிறவி எடுப்பேன்" என்று மக்கள் தவறாக நினைக்கிறார்கள். ஏய் மனிதனே! உன் சிந்தனை கழுதைக்கு ஒப்பானது. நீ எப்படி மீண்டும் மனிதனாகப் பிறக்கப் போகிறாய்? யாருடைய பொருட்களை அனுபவிப்பது, யாருடைய பொருட்களை பறிப்பது, உனக்குச் சொந்தமில்லாததை எப்படி அனுபவிப்பது என்பது தொடர்பான எண்ணங்கள் உங்களுக்கு தோன்றுகிறது. எனவே, அந்த எண்ணங்களே அடுத்த ஜென்மத்திற்கு உன்னை அழைத்துச் செல்கிறது!

**கேள்வி கேட்பவர்:** உயிரினங்கள் மனித வாழ்க்கை கதிக்கு வந்த பிறகு, மனிதனாக மட்டுமே மறுபிறவி எடுக்கின்றனவா அல்லது வேறு எங்காவது சென்றுவிடுகின்றனவா? அதற்கு விதிகள் ஏதும் உள்ளதா?

**தாதாஸ்ரீ:** இந்தியாவில் மனிதனாகப் பிறந்த பிறகு, நான்கு வாழ்க்கை கதிகளில் ஏதேனும் ஒன்றில் அலைந்து திரிய

வேண்டும். இந்தியாவிற்கு வெளியே உள்ள மனிதர்களுக்கு (மறுபிறவியில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு) அது பொருந்தாது. ஆனால் அவர்களின் மக்கள் தொகையில் இரண்டு முதல் ஐந்து சதவிகித மக்களுக்கு இதில் விதிவிலக்கு உள்ளது. மற்ற அனைவரும் தொடர்ந்து வளர்ச்சி அடைந்துகொண்டு இருக்கின்றனர்.

**கேள்வி கேட்பவர்:** மக்கள் *விதாதா* (படைப்பாளர்) என்று குறிப்பிடுவது, யாரைக் குறிப்பிடுகிறார்கள்?

**தாதாஸ்ரீ:** உண்மையில் இயற்கையைத்தான் அவர்கள்

*விதாதா* என்று குறிப்பிடுகிறார்கள். *விதாதா* என்ற பெயரில் ஒரு தெய்வம் இல்லை. அறிவியல் சூழ்நிலை ஆதாரங்கள் (சைன்டிபிக் சர்கம்ஸ்டேன்சியல் எவிடன்ஸ்) தானே *விதாதா.* குழந்தை பிறந்த ஆறாவது நாளில், பிறந்த குழந்தையின் வாழ்க்கை விதி எவ்வாறு இருக்கும் என்பதை *விதாதா* வந்து எழுதுகிறார் என்ற மூட நம்பிக்கைகளை நம் மக்கள் புகுத்திவிட்டனர். இது அவர்களின் கற்பனையின்படி சரியானதே, ஆனால் உண்மையில் அப்படி அல்ல.

இங்கே, (இயற்கையின்) விதி என்னவென்றால், யாரொருவர் தனக்குச் சொந்தமில்லாததை எடுத்துக் கொள்கிறாரோ, அவர் இரு கால் (மனித வாழ்க்கை) கதியிலிருந்து நான்கு கால் (விலங்கு-வாழ்க்கை) கதிக்கு செல்கிறார். ஆனால், அதுவும் நிரந்தரமானது இல்லை. அதிகபட்சம், அது இருநூறு ஆண்டு காலம் வரை இருக்கும், அல்லது ஏழு முதல் எட்டு பிறவிகள் விலங்காக பிறவி எடுக்க வேண்டும், அல்லது குறைந்தபட்சம், ஐந்து நிமிடங்களாவது

விலங்கு கதியில் வாழ்க்கையை கழித்துவிட்டு மீண்டும் மனித பிறவியை எடுப்பார். சில உயிரினங்கள் ஒரு நிமிடத்தில் பதினேழு முறை ஒரு உயிரின வாழ்கையிலிருந்து மற்றொரு உயிரின வாழ்க்கைக்கு மாறுகின்றன! எனவே, இது போன்ற உயிரினங்களும் உள்ளன. எனவே, விலங்கு கதிக்குச் செல்பவர்கள் நூறு முதல் இருநூறு ஆண்டுகள் ஆயுளை கொண்டிருக்கப் போவதில்லை.

## ஒருவரது குணாதிசயங்களின் அடிப்படையில் புரிந்து கொள்ள முடியும்

**கேள்வி கேட்பவர்:** ஒரு மனிதன் விலங்கு வாழ்க்கை கதியில் ஜென்மம் எடுப்பார் என்பதை நம்ப வைக்கும் அறிவியல் ஆதாரத்தை எங்களுக்கு தயவு செய்து தாருங்கள்.

**தாதாஸ்ரீ:** நாயைப் போல் குரைக்கும் நபரை நீங்கள் எப்போதாவது சந்தித்திருக்கிறீர்களா? நீங்கள் அவரிடம், “ஏன் இப்படி குரைக்கிறாய்?” என்று சொல்லியிருக்கிறீர்களா? அவர் அங்கிருந்து, (அவரது முந்தைய ஜென்மத்தில்) நாயாக இருந்து வந்துள்ளார். குரங்கு போல் நடந்துகொள்ளும் சிலரும் உண்டு! அவர்கள் குரங்கிலிருந்து வந்திருக்கிறார்கள். உங்களுடையதை பிடுங்குவதற்குத் தயாராக, பூனையைப் போல உற்றுப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பவர்கள் சிலர். அப்படிப்பட்டவர்கள் அங்கு (அந்த பூனையின் ஜென்மத்தில்) இருந்து வந்திருக்கிறார்கள். எனவே, ஒருவர் எங்கிருந்து வந்தார் என்பதைத் தீர்மானிக்க முடியும், மேலும் அவர்கள் எங்கு செல்வார்கள் என்பதையும் தீர்மானிக்க முடியும். எனினும், அதுவும் நிலையானதல்ல. இந்த மக்கள் எப்படிப்பட்டவர்கள் என்றால் தீய

கர்மாவை போதுமான அளவிற்கு எப்படி பிணைப்பது என்பதைப்பற்றி கூட தெரியாதவர்கள்.

எனவே, காலச் சுழற்சியின் தற்போதைய சகாப்தத்தில் *(கலியுக்)* கலியுகத்தில் உள்ள இவர்களுக்கு, தீய கர்மாவை *(பாப்)* எப்படி பிணைப்பது என்று கூடத் தெரிவதில்லை. எனினும், அவர்கள் செய்வது தீய கர்மா மட்டும் தான்! அப்படியென்றால் அவர்களின் தீய கர்மாவின் பலன் என்ன? அதிகபட்சம், அவர்கள் ஐம்பது முதல் நூறு ஆண்டுகள் வரை விலங்கு கதியில் கழிப்பார்கள். பிறகு அவர்கள் இங்கு (மனித கதிக்கு) திரும்புகிறார்கள். அவர்கள் ஆயிரக்கணக்கான வருடங்களோ அல்லது நூறாயிரக்கணக்கான வருடங்களோ (ஒரு மிருகமாக) கழிப்பதில்லை. விலங்கு கதியில் வெறும் ஐந்து வருடங்கள் கழித்துவிட்டு, மனித கதிக்கு திரும்பி வருபவர்கள் பலர் உள்ளனர். எனவே, விலங்கு கதிக்கு செல்வதை ஒரு குற்றச் செயலாக கருத வேண்டாம். ஏனென்றால், அந்த மக்கள் உடனடியாக (மனித கதிக்கு) திரும்புகிறார்கள். ஏனென்றால், அவர்கள் மிகவும் கடுமையான தீய கர்மாவை பிணைப்பதில்லை! அத்தகைய கடுமையான தீய கர்மாவை பிணைக்கும் திறன் அவர்களுக்கு இல்லை.

## வளர்ச்சி மற்றும் அழிவின் நியதி

**கேள்வி கேட்பவர்:** மக்கள்தொகை தொடர்ந்து அதிகரித்து வருகிறது; இதற்கு அர்த்தம் விலங்குகளின் எண்ணிக்கை குறைந்துவிட்டதா?

**தாதாஸ்ரீ:** ஆம், அது உண்மைதான். ஆத்மாக்களின்

எண்ணிக்கை அப்படியே தான் உள்ளது. இருப்பினும், அதில் மாற்றங்கள் தொடர்ந்து நடைபெறுகிறது. சில நேரங்களில், மக்கள்தொகை அதிகரிக்கும் போது, விலங்குகளின் எண்ணிக்கை குறைந்துள்ளது. அதற்கு நேர்மாறாகவும் நடந்துள்ளது. இந்த மாற்றம் அப்படியே தொடர்கிறது. இப்போது, மீண்டும் மக்கள்தொகை குறையும். 1993ஆம் ஆண்டிலிருந்து குறைய ஆரம்பிக்கும்!

அதேசமயம், 2000-ம் ஆண்டில் இது நடக்கும், அது நடக்கும் என்று மக்கள் கணக்கீடுகள் செய்கிறார்கள்; இந்தியாவில் மக்கள் தொகை அதிகரிக்கும், நாம் எதை சாப்பிடுவோம்? அத்தகைய கணக்கீடுகளை அவர்கள் செய்வதில்லையா? அந்த மதிப்பீடுகள் எப்படி இருக்கும்? நான் இதற்கு ஒரு உவமையைக் கூறட்டுமா?

பதினான்கு வயது சிறுவன் ஒருவன் இருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் நான்கு அடி நான்கு அங்குலம் உயரமாக இருக்கிறான். அவனுக்கு பதினெட்டு வயதாகும் போது, அவனுடைய உயரம் ஐந்து அடி ஆக இருக்கும். அதற்கு, மற்றவர்கள் “அவன் நான்கு ஆண்டுகளில் எட்டு அங்குலம் வளர்ந்துவிட்டான். அப்படியென்றால் எழுபது வயதில் அவர் எவ்வளவு உயரம் இருப்பார்?” என்று கூறுவார்கள். இப்படி ஒரு கணக்கீடு செய்வது, மக்கள்தொகை தொடர்பாக அவர்கள் செய்யும் கணக்கீடுகளுடன் ஒப்பிடத்தக்கது!

## குழந்தைகள் ஏன் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டும்?

**கேள்வி கேட்பவர்:** ஏன் அப்பாவி குழந்தைகள் உடல்

உபாதைகளுக்கு ஆளாகிறார்கள்?

**தாதாஸ்ரீ:** ஒரு குழந்தை தனது கர்மாவின் வெளிப்பாடை அனுபவிக்க வேண்டும், அவனுடைய தாயார் அதை நேரில் பார்த்து அந்த துன்பத்தை அனுபவிப்பார். கர்மாவின் முக்கிய பகுதி குழந்தைக்குரியது, ஆனால் (குழந்தையின் கர்மப் பிணைப்பிற்கு) அவனுடைய தாய் துணை நின்று அந்த செயலை ஆதரித்து பங்கு வகித்ததால், அவள் அதைக் கண்டு துன்பப்பட வேண்டியிருக்கும். ஒரு செயலை செய்வது, யாரையாவது செய்ய வைப்பது, அல்லது ஒருவர் செய்வதை ஆதரிப்பது; என்ற இந்த மூன்று காரணங்கள் தான் கர்ம பிணைப்பின் பின்னணியில் உள்ளது.

## மனித வாழ்க்கையின் முக்கியத்துவம்

ஒருவர் மனித கதிக்கு வந்த பின்பும், அவர் மற்ற வாழ்க்கை கதிகளான அதாவது தேவகதி *(தேவ்)*, *திரியஞ்ச்* கதி (மனிதர்களைத் தவிர, ஒன்று முதல் ஐந்து புலன்கள் கொண்ட அனைத்து உயிரினங்களையும் உள்ளடக்கிய வாழ்க்கை கதி), அல்லது நரக கதி *(நரக்)* உள்ளிட்ட கதிகளுக்கு செல்லும் வாய்ப்புள்ளது. எனினும், அதன் பின்பும் அவர் மனித கதிக்குத் திரும்ப முடியும். மேலும், இப்படி அலைந்து திரியும் சுழற்சியிலிருந்து ஒருவர் விடுவிக்கப்படுவது, மனித கதியில் தான் அமைகிறது. ஒருவர் தன் மனிதப் பிறவியை எப்படி வெற்றியடையச் செய்வது என்று அறிந்தால், அவர் மோட்சத்தை அடையலாம். அவர் அவ்வாறு செய்யவில்லையெனில், அவர் அலைந்து திரியும் சுழற்சியை அதிகரிப்பதற்கும், வழிவகுக்கிறது! மற்ற வாழ்க்கை கதிகளில், ஒருவர் கர்மாவை வெளியேற்றம் மட்டுமே செய்கிறார்.

மனிதப் பிறவியில், இவை இரண்டும் உண்டு; கர்மா வெளியேறுகிறது, அதே சமயத்தில் கர்ம ஏற்றமும் ஏற்படுகிறது. எனவே, மிகவும் சிரமப்பட்டு இந்த மனித உடல் பெறப்பட்டிருக்கிறது. அதனால், உங்கள் (ஆன்மீக) பணிகளை சாதிப்பதற்காக இந்த மனிதப் பிறவியைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். இந்த மனித உடலைப் பெற ஆத்மாவானது, முடிவில்லாப் பிறவிகளை கடந்து வந்துள்ளது. இந்த உடலை ஒரு வாழ்நாள் மட்டும் ஆன்மீக நோக்கத்திற்காக பயன்படுத்தினால், அந்த பணி (மோட்சத்திற்கானது) நிறைவேறிவிடும்!

மனித பிறவியில் ஒருவர் ஞானி புருஷரை சந்தித்தால், அவர் மோட்சம் அடையலாம். தேவலோகத்தில் இருப்பவர்கள் கூட மனித பிறவியைப் பெற வேண்டும் என்ற தீவிர ஆசை கொண்டுள்ளனர். ஞானி புருஷரை சந்தித்தவுடன், அவருடன் தொடர்பை ஏற்படுத்தியவுடன், எல்லையற்ற பிறவிகளாக விரோதியாக இருந்த உடல், சிறந்த நண்பனாகி விடுகிறது! எனவே, இந்த உடலில் ஞானி புருஷரை நீங்கள் சந்தித்திருக்கிறீர்கள். எனவே, உங்கள் (ஆன்மீக) பணியை முழுமையாக முடித்துக்கொள்ளுங்கள். ஞானி புருஷருடனான தொடர்பை முழுமையாக ஏற்படுத்திக்கொண்டு, மோட்சம் அடையுங்கள்.

## அழியாதவருக்கு பிறப்பு மற்றும் இறப்பு சுழற்சி இருக்குமா?

**கேள்வி கேட்பவர்:** ஆனால், பிறப்பு மற்றும் இறப்பின் சுழற்சியை யார் அனுபவிக்கிறார்கள்?

**தாதாஸ்ரீ:** பிறப்பு மற்றும் இறப்பின் சுழற்சியை மேற்கொள்வது அஹங்காரம் ஆகும். ஆத்மா ஒரே நிலையில்தான் உள்ளது. அஹங்காரம் முடிவுக்கு வரும்போது, அதன் சுழற்சியும் முடிவுக்கு வந்துவிடுகிறது!

## அதன்பிறகு, மரண பயம் என்பது இல்லை

**கேள்வி கேட்பவர்:** இந்த (ஆத்ம ஞானம்) என்றென்றும் அமைதியை தருகிறது. எனவே, இது இந்த வாழ்க்கைக்கு உண்டானது மட்டும் தானா, அல்லது இனி வரும் அனைத்து பிறவிகளிலும் நிலைத்திருக்குமா?

**தாதாஸ்ரீ:** இல்லை, அது நிரந்தரமானது. அது மட்டுமல்ல, (ஆத்ம ஞானத்தை அடைந்த பிறகு), ஒருபோதும் ஒருவர் செய்பவராக இருப்பதில்லை. அதனால், கர்மா பிணைக்கப்படுவதில்லை. ஒன்று அல்லது இரண்டு பிறவிகளுக்குப் பிறகு முழுமையான விடுபட்ட நிலை அதாவது மோட்சம் *(மோக்ஷ்)* அடைவது என்பது உறுதி. வேறு வழி இல்லை, உறுதியாக மோட்சம் அடைவார்கள். மோட்சத்தை விரும்பாதவர் இங்கு ஆத்ம ஞானம் பெறுவதில் ஈடுபடக்கூடாது; அவர் இங்கே காலடி வைக்கக்கூடாது.

**கேள்வி கேட்பவர்:** இந்த ஆத்ம ஞானத்தை நாங்கள் அடுத்த ஜென்மத்தில் ஞாபகம் இருக்குமா?

**தாதாஸ்ரீ:** எல்லாம் அப்படியே இருக்கும். ஆத்ம ஞானம் அடைந்ததில் எந்த மாற்றமும் இருக்காது. ஏனென்றால், புதிய கர்மா பிணைக்கப்படுவதை நீங்கள் நிறுத்திவிட்டீர்கள், அதனால் மீண்டும் எந்த சிக்கலும் ஏற்படாது!

**கேள்வி கேட்பவர்:** அப்படியானால், எங்களது கடந்தகால வாழ்க்கையில், நாங்கள் அத்தகைய கர்மாவைக் கட்டுண்டுள்ளோம். அதனால்தான், அதன் சிக்கல் தொடர்ந்து கொண்டிருக்கிறது என்று அர்த்தமா?

**தாதாஸ்ரீ:** கடந்தகால ஜென்மத்தில், அஞ்ஞான நிலையில் கர்மா பிணைக்கப்பட்டது. இப்போது இந்த ஜென்மம் என்பது அந்த கர்மாவின் விளைவாகும். விளைவுகளினால் உண்டாகும் துன்பங்களையும் மகிழ்ச்சியையும் அனுபவிக்க வேண்டும். ஒரு ஞானியை சந்திக்கவில்லை என்றால், புதிய காரணங்களும் புதிய விளைவுகளும் தவிர்க்க முடியாமல் எழுந்து கொண்டே இருக்கும். புதிய காரணங்கள் தவிர்க்க முடியாமல் விளைவுகளிலிருந்து எழும். மேலும் அந்த காரணங்கள் அடுத்த வாழ்க்கையில் ஒரு விளைவைக் கொடுக்கும். காரணங்கள் மற்றும் விளைவுகள், விளைவுகள் மற்றும் காரணங்கள், காரணங்கள் மற்றும் விளைவுகள், விளைவுகள் மற்றும் காரணங்கள், காரணங்கள் மற்றும் விளைவுகள் என்ற சுழற்சி; இடைவிடாமல் தொடர்ந்து கொண்டே இருக்கும். இவ்வாறு, ஞானி புருஷர் காரணங்களை முடிவுக்குக் கொண்டு வரும்போது, விளைவுகளை (பாதிப்பை மற்றும் மகிழ்ச்சியை) மட்டுமே அனுபவிக்க வேண்டியிருக்கும். புதிய கர்மப் பிணைப்பு நிறுத்தப்பட்டுவிட்டது.

எனவே, நீங்கள் இந்த ஞானத்தை நினைவில் கொள்வீர்கள் என்பது மட்டுமல்ல, நீங்கள் உண்மையில் ஞான சொரூபமாகி விடுவீர்கள். அதன்பிறகு, மரண பயம் கூட உங்களுக்கு இருக்காது! எதற்கும் பயம் இருக்காது, அச்சமற்ற நிலை நிலவும்.

# 3. மரண சமயத்தின்போது இருக்கும் விழிப்புணர்வு

## நாம் வாழும் காலம் வரை

**கேள்வி கேட்பவர்:** தாதா! ஞானம் அடைவதற்கு முன், இந்த வாழ்க்கையில் பிணைக்கப்பட்ட சூழல்களை எவ்வாறு அகற்றுவது?

**தாதாஸ்ரீ:** நீங்கள் உயிருடன் இருக்கும் காலம் வரை, நீங்கள் செய்த தவறை எல்லாம் மன்னிப்பு கேட்டு அகற்றிவிடலாம். இருப்பினும், ஓரளவிற்கு மட்டுமே அகற்ற முடியும்; தவறுகளை முற்றிலுமாக அகற்றிவிட முடியாது. இருப்பினும், அவை நிச்சயமாக தளர்ந்துவிடும். அவை தளர்ந்துவிடுகின்றன. எனவே, அடுத்த ஜென்மத்தில், நீங்கள் அந்த “முடிச்சுகளை” (தவறுகளை) கையால் தொட்டவுடனேயே அவிழ்ந்துவிடும்!

**கேள்வி கேட்பவர்:** பிராயச்சித்தம் மூலம் பிணைக்கப்பட்ட கர்மா அழிந்து விடுகிறதா?

**தாதாஸ்ரீ:** ஆம், அது அழிந்து விடும். சில வகையான பிணைக்கப்பட்ட கர்மா இரட்டை முடிச்சுகளை போன்று இருக்கின்றன; அவை பிராயச்சித்தம் செய்வதன் மூலம் தளர்த்தப்படுகின்றன. ‘நம்’ *ப்ரத்திக்ரமன்* (மன்னிப்பு கோருதல்) வழிமுறைக்கு அபார சக்தி உண்டு. தாதாவை முன்வைத்து அதைச் செய்தால், அது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

## இந்த ஞானத்தை அடைந்த பிறகு, புதிய கர்மக் கணக்கு மஹாவிதேஹத்திற்குரியது

உங்கள் கர்மாவின் காரணமாக நீங்கள் மறுபிறவி எடுக்க வேண்டியிருக்கும், அநேகமாக ஒன்று அல்லது இரண்டு பிறவிகள் இருக்கும். ஆனால், அதற்குப் பிறகு சீமந்தர் சுவாமி இருக்கும் இடத்திற்கு தான் செல்ல வேண்டும். கடந்த காலத்தில் பிணைக்கப்பட்டிருந்த கர்மாவின் வலிமை, கடந்த ஜென்மத்தில் பிணைக்கப்பட்ட கர்மக் கணக்கு, கொஞ்சம் கடுமையாகிவிட்டது, அது முடிவுக்கு வந்துவிடும். அதை அனுபவித்து தான் ஆகவேண்டும்!

**கேள்வி கேட்பவர்:** *ப்ரத்திக்ரமன்* செய்வதால், கர்மாவின் வலிமை குறையுமா?

**தாதாஸ்ரீ:** ஆம் குறையும்! மேலும் தீர்மானமான முடிவு விரைவில் ஏற்பட்டுவிடும்.

## இப்படித்தான் உலகம் முழுவதிடமும் மன்னிப்பு கேட்டு எங்கள் தவறுகளை நீக்கி விட்டோம்

எவ்வளவு தவறுகள் *ப்ரத்திக்ரமன்* மூலம் அழிக்கப்படுகிறதோ, மோட்சம் அவ்வளவு அருகில் உள்ளது.

**கேள்வி கேட்பவர்:** இந்த “பைல்கள்” (நெருங்கிய உறவுகள்) அடுத்த ஜென்மத்தில் மீண்டும் நம்முடன் இணைந்திருக்க மாட்டார்கள், இல்லையா?

**தாதாஸ்ரீ:** அடுத்த பிறவிக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? இங்கிருக்கும்போதே *ப்ரத்திக்ரமன்* செய்துவிடுங்கள்.

உங்களுக்கு ஓய்வுநேரம் கிடைக்கும்போது, அவர்களுக்கு *ப்ரத்திக்ரமன்* செய்து கொண்டே இருங்கள். '*ப்ரத்திக்ரமன்* செய்து கொண்டே இரு' என்று சந்துபாயிடம் (உங்களுடைய பெயரை பொருத்திக்கொள்ளவும்) 'நீங்கள்' சொல்ல வேண்டும். வீட்டில் உள்ள அனைவரையும், கடந்த ஜென்மத்தில் எப்போதாவது, நீங்கள் அவர்களை துக்கப்படுத்தி இருப்பீர்கள், அதனால் நீங்கள் அதற்காக *ப்ரத்திக்ரமன்* செய்ய வேண்டும். "எண்ணிலடங்கா கடந்த ஜென்மங்களில் செய்த விருப்பு மற்றும் வெறுப்பு, பாலுணர்வு, கோபம், அஹங்காரம், கபடம் மற்றும் பேராசை போன்ற தவறுகளுக்கு நான் மன்னிப்புக் கேட்கிறேன்" என்று *ப்ரத்திக்ரமன்* செய்ய வேண்டும். தினத்திற்கு ஒரு குடும்ப நபர் என்று, வீட்டிலுள்ள ஒவ்வொரு நபருக்கும் இப்படி *ப்ரத்திக்ரமன்* செய்யுங்கள். பிறகு, உங்களைச் சுற்றி உள்ளவர்களுக்கும், அண்டை வீட்டாருக்கும்; விழிப்புணர்வுடன் தொடர்ந்து *ப்ரத்திக்ரமன்* செய்யுங்கள். இப்படிச் செய்வதால், செய்த தவறுகளின் பாரம் குறையும். அது தானாகவே குறையாது.

இப்படித்தான் "நாங்கள்" இந்த உலகத்தில் உள்ள அனைவருடனும் தீர்வு கண்டோம். "நாங்கள்" முதலில் இவ்வழியில் (உலகம் முழுவதுடனும்) தீர்வு கண்டோம், அதனால்தான் "நாங்கள்" விடுவிக்கப்பட்டோம். நீங்கள் எங்கள் தவறுகளை காணும்வரை "நாங்கள்" பொறுப்பில்லாமல் இருக்க முடியாது! எனவே, எப்போதெல்லாம் "நாங்கள்" இந்த முறையில் *ப்ரத்திக்ரமன்* செய்கிறோமோ, அப்போது அங்கேயும் (எங்களைப் பற்றி நீங்கள் வைத்திருக்கும் எதிர்மறை எண்ணங்கள்) அழிந்துவிடுகிறது.

## இறந்தவர்களுக்கு எவ்வாறு ப்ரத்திக்ரமன் செய்வது?

**கேள்வி கேட்பவர்:** உயிருடன் இல்லாத ஒருவரிடம் எவ்வாறு மன்னிப்பு கேட்பது?

**தாதாஸ்ரீ:** அவர்கள் உயிருடன் இல்லாவிட்டாலும், அந்த நபரின் புகைப்படம் உங்களிடம் இருந்தால், அவர்களின் முகத்தை நீங்கள் நினைவில் வைத்திருந்தால், *ப்ரத்திக்ரமன்* செய்யலாம். அவர்களின் முகம் உங்களுக்கு நினைவில் இல்லாமலிருந்து, அவர்களின் பெயர் உங்களுக்குத் தெரிந்தால், அவர்களின் பெயரைக் கொண்டும் *ப்ரத்திக்ரமன்* செய்யலாம். அனைத்தும் அந்த நபரை சென்றடைந்துவிடும்.

**கேள்வி கேட்பவர்:** அப்படியானால், இறந்த ஒருவருக்கு எப்படி *ப்ரத்திக்ரமன்* செய்வது?

**தாதாஸ்ரீ:** முதலில் இறந்து போனவர்களின் சுத்தாத்மாவை நினைவு கூரவும், அதாவது மனம், உடல், மற்றும் பேச்சு, காரண தொடர்புடைய கர்மா, நுட்பமான விளைவு கர்மா மற்றும் வெளிப்படும் விளைவு கர்மா, (இறந்தவரின் பெயரை சொல்லவும்) மற்றும் (இறந்தவரின் பெயரை சொல்லவும்) பெயரின் தொடர்பான அனைத்து மாயையில் இருந்து முற்றிலும் தனித்திருக்கும் சுத்தாத்மாவை நினைவு கூரவும். பிறகு நீங்கள் அந்த நபரிடம் செய்த தவறுகளை நினைவுக்கூர்ந்து கொள்ளவும் *(ஆலோச்சனா).* (மனதில் சொல்லவும்,) 'நான் இந்த தவறுகளுக்கு வருந்துகிறேன், தயவு செய்து இந்த தவறுகளுக்காக என்னை மன்னிக்கவும் *(ப்ரத்திக்ரமன்).* நான் இந்த தவறுகளை மீண்டும் செய்யமாட்டேன் என்று உறுதியாக தீர்மானம் செய்கிறேன் *(ப்ரத்யாகான்)*'; இப்படி

உறுதியான தீர்மானம் செய்ய வேண்டும். 'நீங்கள்' (ஆத்ம சொரூப நிலையிலிருந்து) சந்துபாயின் அறிபவர்-காண்பவர் என்று இருக்க வேண்டும், மேலும் சந்துபாய் எவ்வளவு *ப்ரத்திக்ரமன்* செய்கிறார், எவ்வளவு நன்றாக செய்கிறார், எத்தனை முறை செய்கிறார், என்பதை 'நீங்கள்' அறிய வேண்டும்.

**ஜெய் சச்சிதானந்தம்**

**(அழிவற்றிருக்கும் பரம்பொருளை அறிவதே பேரானந்தம்)**

# வாழ்க்கையில் இறுதிக் கட்டத்தில் இருப்பவர்கள் செய்ய வேண்டிய பிரார்த்தனை

**அன்பார்ந்த தாதா பகவான், அன்பார்ந்த ஸ்ரீ சீமந்தர் ஸ்வாமி பிரபு, நான் எனது மனம், பேச்சு, உடல், (*இறுதிக் கட்டத்தில் இருப்பவர் தனது பெயரை இங்கே பொருத்திக்கொள்ளவும்) மற்றும் (*இறுதிக் கட்டத்தில் இருப்பவர் தனது பெயரை இங்கே பொருத்திக் கொள்ளவும்) பெயரின் தொடர்பான அனைத்து மாயை, காரண தொடர்புடைய கர்மா, நுட்பமான விளைவு கர்மா மற்றும் வெளிப்படும் விளைவு கர்மா, ஆகியவற்றை பரமாத்மா சொரூபமான தாதா பகவானின் பாதகமலங்களில் சமர்ப்பணம் செய்கிறேன்.**

**அன்பார்ந்த தாதா பகவான், அன்பார்ந்த ஸ்ரீ சீமந்தர் ஸ்வாமி பிரபு, நான் தங்களது தனித்துவமான அடைக்கலத்தில் வீற்றிருக்க வேண்டுகிறேன். நான் தங்களுடைய தனித்துவமான அடைக்கலத்தை அடைய வேண்டுகிறேன். இறுதி தருணங்களில் என்னுடனே இருங்கள். என் கரத்தைப் பிடித்துக் கொண்டு மோட்சத்திற்கு என்னை அழைத்துச் செல்லுங்கள். இறுதி வரை என்னுடனே இருங்கள்.**

**அன்பார்ந்த பகவானே, எனக்கு மோட்சம் தவிர இவ்வுலகின் யாதொரு தற்காலிக விஷயத்திலும் எனக்கு ஆசை இல்லை. என்னுடைய அடுத்த ஜென்மம் தங்களுடைய பாதகமலங்களில் வீற்றிருக்க வேண்டுகிறேன்.**

**‘தாதா பகவான் நா அசீம் ஜெய் ஜெய் கார் ஹோ’** என்று தொடர்ந்து பாடுங்கள்.

‘என்னுள் இருக்கும் தாதா பகவானின் எல்லையற்ற புகழைப் போற்றி வணங்குகிறேன்’

***** வாழ்கையின் இறுதிக் கட்டத்தில் இருப்பவர் தனது பெயரை இங்கே பொருத்திக்கொள்ள வேண்டும்.

(அந்த நபர் இந்த பிரார்த்தனையை சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும் அல்லது வேறு யாராவது அந்த நபருக்கு இந்த பிரார்த்தனையை சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும்.

## இறந்த நபருக்கு செய்ய வேண்டிய பிரார்த்தனை

**தாதா பகவான் மற்றும் ஸ்ரீ சீமந்தர் ஸ்வாமியின் சாட்சியாக (*இறந்த நபரின் பெயர்) மனம், பேச்சு, மற்றும் உடல், காரண தொடர்புடைய கர்மா, நுட்பமான விளைவு கர்மா மற்றும் வெளிப்படும் விளைவு கர்மா, மற்றும் (*இறந்த நபரின் பெயர்) பெயரின் தொடர்பான அனைத்து மாயையில் இருந்து தனித்திருக்கும் சுத்தாத்மா (*இறந்த நபரின் பெயர்) எங்கிருந்தாலும், அவர் மகிழ்ச்சி மற்றும் அமைதி அடைய கருணை பொழியுங்கள். அவர் மோட்சம் அடையட்டும்.**

**இப்போது வரை (*இறந்த நபரின் பெயர்) மீது எனக்கு ஏற்பட்ட விருப்பு மற்றும் வெறுப்பு, கோபம், பெருமை, கபடம் மற்றும் பேராசை ஆகியவற்றிற்கு நான் மன்னிப்பு கேட்கிறேன். இந்த தவறுகளுக்கு நான் மனதார மிகவும் வருந்துகிறேன். தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள், மேலும் இத்தகைய தவறுகளை மீண்டும் செய்யாமல் இருப்பதற்கு எனக்கு சக்தி வழங்குங்கள்.**

***** இடத்தில் இறந்த நபரின் பெயரை பொருத்திக்கொள்ளவும். (இந்த பிரார்த்தனை திரும்பத் திரும்ப செய்யவும், பிறகு எப்போதெல்லாம் இறந்த நபரை நினைவு கூர்கிறோமோ அப்போதெல்லாம் இந்த பிரார்த்தனையை செய்யவும்).

## தமிழில் தாதா பகவானின் புத்தகங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆத்ம அனுபவம் | 5. | மனிதநேயத்தின் நடைமுறை |
| 2. | அட்ஜெஸ்ட் எவ்ரிவேர் | 6. | கோபம் |
| 3. | மோதல்களை தவிர்க்கவும் | 7. | கவலைகள் |
| 4. | நான் யார்? | 8. | மரணம் |

❖ விரைவில் மேலும் பல புத்தகங்கள் தமிழில் கிடைக்கும்.

## Books of Dada Bhagwan in English

| | | | |
|---|---|---|---|
| 1. | Adjust Everywhere | 19. | Money |
| 2. | Ahimsa: Non-Violence | 20. | Noble Use of Money |
| 3. | Anger | 21. | Pratikraman |
| 4. | Aptavani-1 | 22. | Pure Love |
| 5. | Aptavani-2 | 23. | Right Understanding to Help Others |
| 6. | Aptavani-4 | | |
| 7. | Aptavani-5 | 24. | Science of Karma |
| 8. | Aptavani-6 | 25. | Science of Speech |
| 9. | Aptavani-8 | 26. | Shree Simandhar Swami : The Current Living Tirthankar |
| 10. | Aptavani-9 | | |
| 11. | Autobiography of Gnani Purush A.M Patel | 27. | Simple & Effective Science of Self-Realization |
| 12. | Avoid Clashes | 28. | The Essence Of All Religion |
| 13. | Brahmacharya: Celibacy Attained with Understanding | 29. | The Fault Is Of The Sufferer |
| | | 30. | The Guru and The Disciple |
| 14. | Death: Before, During & After… | 31. | The Hidden Meaning Of |
| | | 32. | The Practice Of Humanity |
| 15. | Flawless Vision | 33. | Trimantra |
| 16. | Generation Gap | 34. | Whatever Happened is Justice |
| 17. | Harmony in Marriage | 35. | Who Am I? |
| 18. | Life Without Conflict | 36. | Worries |

❖ Dada Bhagwan books are available in different languages: Gujarati, Hindi, English, Marathi, Telugu, Kannada, Oriya, Malayalam, Bengali, Punjabi, Assamese, Tamil, German, Spanish, Russian, etc.

❖ 'Dadavani' Magazine is published every month in three languages: Gujarati, Hindi & English.

# <u>தாதா பகவான் பௌண்டேஷன் தமிழ் யூடியூப் சேனல்</u>




- ❖ இது, அதாலஜ் தாதா பகவான் பவுண்டேஷனின் அதிகாரப்பூர்வமான தமிழ் யூடியூப் சேனல் ஆகும்.

- ❖ கீழே உள்ள இணைப்பில் இருந்து தமிழ் மொழியில் சத்சங்க வீடியோக்களை பார்க்கவும்.

**‘Dada Bhagwan Foundation Tamil’ Channel:**
<u>https://dbf.adalaj.org/yttamil</u>

*Open Link OR*
*Scan QR*




---

*Dada Bhagwan Foundation Youtube video channels are available in other regional languages: Gujarati, Hindi, Marathi, Bengali, Tamil, Telugu, Kannada, Malayalam, Spanish, Portuguese, etc.*

# Persons to Contact

## Dada Bhagwan Foundation

**Adalaj** : **Trimandir**, Simandhar City, Ahmedabad-Kalol Highway
P/O: Adalaj, Dist.- Gandhinagar - 382421, Gujarat, India.
Tel : +91-9328661166/9328661177
E-mail : info@dadabhagwan.org

**Mumbai** : **Trimandir**, Rushivan, Kajupada, Borivali (E)
Tel : +91-9323528901

| | | | |
|---|---|---|---|
| **Kolkata:** | 9830093230 | **Delhi:** | 9810098564 |
| **Jaipur:** | 9351408285 | **Chennai:** | 7200740000 |
| **Bhopal:** | 9425024405 | **Patna:** | 7352723132 |
| **Indore:** | 9039936173 | **Amravati:** | 9422915064 |
| **Raipur:** | 9329644433 | **Bangalore:** | 9590979099 |
| **Chandigarh:** | 9780732237 | **Hyderabad:** | 9989877786 |
| **Kanpur:** | 9452525981 | **Pune:** | 9422660497 |
| **Bhubaneswar:** | 8763073111 | **Jalandhar**: | 9814063043 |
| **Varanasi:** | 9795228541 | **Sangli:** | 9423870798 |

| | |
|---|---|
| **USA: Dada Bhagwan Vignan Institute**<br>Tel: + 1-877-505-DADA(3232)<br>Email: info@us.dadabhagwan.org | **U.K: Dada Darshan (UK)**<br>Tel: +44 330-111-DADA(3232)<br>Email: info@uk.dadabhagwan.org |
| **Germany:** +49 700 32327474<br>**UAE:** +97 1557316937<br>**Kenya:** +25 4722722063<br>**Dubai:** +971 501364530 | **Australia:** +61 421127947<br>**Singapore:** +65 81129229<br>**New Zealand:** +64 210376434 |

Website : www.dadabhagwan.org



தாதா அவருடைய இறுதி நாட்களில் பிராணவாயு உதவியுடன் இருந்தார், எனினும் பரமானந்த புன்னகையுடன் இருந்தார்.

## உள்நோக்கத்தின் அதிர்வலைகள் மட்டுமே சென்றடையும்.

உங்கள் பிள்ளைகள் (அல்லது மற்ற உறவினர்கள்) இறந்த பிறகு, அவர்களைப் பற்றி கவலைப்படுவதினால், அவர்கள் துன்பப்படுவார்கள். நம் மக்கள் இப்படி செய்வது எதனால் என்றால் ஆத்ம சொருபத்தை பற்றிய அஞ்ஞான நிலையில் இருப்பதால். அதனால் நீங்கள் (ஆத்ம ஞானம் பெற்றவர்) உண்மை எதுவோ அதை அறிந்து கொண்டு சமாதானமாக இருக்க வேண்டும். தேவையில்லாமல் கவலைப்பட்டு என்ன பயன்? இவை அனைத்தும் உலக வாழ்க்கையின் கர்ம பந்தங்கள் மட்டுமே; இவை கொடுக்கல் வாங்கல் தொடர்புடைய கர்மக் கணக்குகள் ஆகும். இறப்பு ஏற்படுவதற்கான அர்த்தம் என்ன? அவருடைய கர்ம பதிவேடு முடிவுக்கு வந்துவிட்டது என்று அர்த்தம். இறந்த நபரை நீங்கள் நினைவுகூர்ந்து கொண்டே இருந்தால் என்ன செய்ய வேண்டும்? நீங்கள் *விதராக்* (முற்றிலும் உலக வாழ்க்கையில் இருந்து விடுப்பட்ட) பகவானிடம், அவருக்கு அமைதியை வழங்குமாறு பிரார்த்திக்க வேண்டும்.நீங்கள் இந்த உள்நோக்கத்தை வளர்த்து கொண்டால், அந்த உள்நோக்கம் நிச்சயமாக அவரை சென்றடையும்!



dadabhagwan.org




Printed in India

Price ₹40